30th March 1961] [Sri M. Bhaktavatsalam]

on the ground that about 6,000 bags of boiled rice drawn from the Regional Director (Food) earlier had been locked up with it since January 1961 for want of demand due to alleged bad quality. The T.U.C.S. was also not willing to draw supplies of even raw rice for distribution through the Fair Price Shops until it was able to dispose of the boiled rice lying with it. Probably, some inconvenience was caused to the public drawing supplies from the Fair Price Shops of the T.U.C.S. Now that the Regional Director (Food) has revived the supply of rice and that the T.U.C.S. Limited has also disposed of the stocks of boiled rice lying with it, there can be no difficulty for the general public to draw their supplies of rice from Fair Price Shops.

## VI.—GOVERNMENT MOTION *RE*: TRANSACTION OF GOVERNMENT BUSINESS ON NON-OFFICIAL DAY.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That Rule 23 of the Madras Legislative Assembly Rules be suspended and the House do resolve to transact official business on Thursday, the 30th March 1961."

DEPUTY SPEAKER : The question is—

"That Rule 23 of the Madras Legislative Assembly Rules be suspended and the House do resolve to transact official business on Thursday, the 30th March 1961."

The motion was put and carried.

## VII.—GOVERNMENT BILL.

### THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961 (L.A BILL NO. 22 OF 1961).

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, I beg to move—

"That the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961),[a] be referred to a Select Committee of the House consisting of the following 20 Members of the Legislative Assembly :—

1. The Hon. Sri M. Bhaktavatsalam.
2. The Hon. Sri C. Subramaniam.
3. Sri C. R. Ramaswami.
4. Sri P. G. Karuthiruman.
5. Sri G. Narayanaswami Naidu.
6. Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran.
7. Sri A. P. C. Veerabahu.
8. Sri R. Krishnasami Naidu.
9. Sri K. S. Subramania Gounder.
10. Sri A. Mariappan.

[a] Published in the *Fort St. George Gazette*, dated the 28th March 1961.

11. Sri C. Muthiah.
12. Sri R. Subramaniam.
13. Sri V. K. Krishnamurthy.
14. Sri V. K. Ramaswamy Mudaliyar.
15. Sri P. K. Mookiah Thevar.
16. Sri S. M. Annamalai.
17. Sri A. Govindasami.
18. Sri M. Kalyanasundaram.
19. Sri P. S. Chinnadurai.
20. Sri M. Jagannathan.''

Under Rule 97 (1) of the Assembly Rules, the Minister in charge of the Bill will be a Member of the Select Committee.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த கூட்டுறவுச் சட்டம் 1932-ம் வருடத்தில் முதன்முதலில் திருத்தியமைக்கப்பட்டது. 1913-ம் வருடத்திய சட்டம் 1932-ல் திருத்தியமைக்கப்பட்டது. அதற்குப் பிறகு கூட்டுறவு இயக்கம் பலமாக நம் நாட்டில் பல துறைகளில் விரிவடைந்திருக்கிறது. ஆரம்ப காலத்தில் கடன் வசதி கொடுக்க மாத்திரம்தான் கூட்டுறவு என்று நாம் நினைத்து அதற்கான விதிகளை, அதற்கான சட்டங்களை எல்லாம் இயற்றியிருக்கிறோம். ஆனால் இன்று பல துறைகளில் கூட்டுறவு இயக்கம் விரிவடைந்து இன்றைக்கு முன்னேற்றம் கண்டிருக்கிறது. விரிவடைந்த சமுதாயத்திற்கொத்தபடி கூட்டுறவு இயக்கத்தை நல்ல அடிப்படையில் நடத்துவதற்கான சட்டத்தை இயற்றவேண்டுமென்பதற்காக இது திருத்தியமைக்கப்படவேண்டுமென்ற அபிப்பிராயம் நீண்ட காலமாக நம் ராஜ்யத்தில் நிலவி வந்தது. 1946-ம் வருடத்தில் இந்தச் சட்டத்தை திருத்தியமைக்கவேண்டுமென்ற யோசனை வந்தது. ஆனால் பல காரணங்களால் அது அப்போது செய்யப்படவில்லை. அதற்குப் பிறகு ராஜ்ய சர்க்கார் நாராயணஸ்வாமி பிள்ளை கமிட்டி ஒன்று நியமித்து எந்த முறையில் இது திருத்தியமைக்கப்பட வேண்டுமென்று அவர்கள் சிபார்சுகளை கேட்டுக்கொண்டோம். நாராயணஸ்வாமிப் பிள்ளை கமிட்டி அவர்கள் அறிக்கையைக் கொடுத்திருக்கிறார்கள். மத்திய அரசாங்கத்திலும் "லா கமிட்டி" ஒன்று வைத்து புதிதாக அமையயிருக்கிற கூட்டுறவுச் சட்டம் எப்படி இருக்கவேண்டுமென்பதற்கு அவர்களும் அவர்கள் ஆலோசனைகளை கொடுத்திருக்கிறார்கள். அந்த அறிக்கையும் இருக்கிறது. இந்த சிபார்சுகளை வைத்துக் கொண்டு, நடைமுறையில் இருக்கக்கூடிய சங்கடங்கள், தொல்லை, தொந்தரவுகள் எல்லாவற்றையும் பார்த்து ராஜ்ய சர்க்கார் இந்த மசோதாவைத் தயாரித்திருக்கிறது. இந்த மசோதாவிலுள்ள சில முக்கிய அம்சங்களை இப்பொழுது விளக்க விரும்புகிறேன். இதுவரை இந்தக் கூட்டுறவு சங்கங்களில் கோவாப்பரேட்டிவ் கிரெடிட் சொசைட்டிகள் எல்லாம் வறையறுக்கப்படாத பொறுப்புள்ளதாகயிருக்கிறது. அன் லிமிட்டெட் லயபிலிட்டியுள்ள சொஸைட்டிகள் இருக்கின்றன. இன்று நாம் கொண்டு வந்திருக்கிற சட்டத்தில் லிமிட்டெட் சொஸைட்டீஸ்-ம் அன் லிமிட்டெட் சொஸைட்டீஸ்-ம் இருக்கலாம் என்று திருத்தம் செய்திருக்கிறோம். லிமிட்டெட் சொஸைட்டீஸில், பங்கு பத்திரம் எடுத்துக் கொள்கிறவர்களுக்கு அதில் ஏதாவது நஷ்டம் ஏற்பட்டால், அவர்கள் எவ்வளவு பங்குத்தொகை போட்டிருக்கிறார்களோ, அந்த அளவிற்குத்தான் அவர்களுக்கு நஷ்டம் ஏற்படும். அதனால் தைரியமாக எல்லோரும் கூட்டுறவு சங்கத்தில் வந்து சேரவும், அதிகமாக பங்குகெடுத்துக்கொள்ளவும் உதவியாகயிருக்கும். அன் லிமிட்டெட் லயபிலிட்டீஸ் என்றால் அவர்கள் சொந்த சொத்துக்கள் பூராவும் கடனுக்கு ஈடு செய்யவேண்டியிருக்குமாதலால், அதிக நபர்கள் கூட்டுறவு சங்கத்தில் வந்து சேரமுன்வருவதில்லை.

ஆகவே சட்டத்தில் லிமிட்டெட் லயபிலிட்டி சொஸைட்டியாகவோ அல்லது அன் லிமிட்டெட் லியபிலிட்டி சொஸைட்டியாகவோ இருக்கலாம் என்ற ஒரு பெரிய திருத்தம் செய்திருக்கிறோம். இரண்டாவதாக, இன்று கூட்டுறவு சங்கத்தில் பலரை சேர்ப்பதில்லை, அவர்களை சேர்த்துக் கொள்ள மறுக்கிறார்கள். அதனால் பலர் கூட்டுறவு சங்கத்தின் பலன்களை பெறமுடியவில்லை என்ற புகார் அடிக்கடி நம் ராஜ்யத்தில் வந்து கொண்டிருக்கின்றன. அதற்கு இடம் கொடுக்கக்கூடாது. கூட்டுறவு இயக்கம் என்பது எல்லோருக்கும் உதவிகரமாயிருக்க வேண்டும். தகுதியுள்ளவர்கள் எல்லோரும் அதில் அங்கத்தினர்களாக சேர வேண்டுமென்ற அடிப்படையில் இன்றைக்கு நாம் சட்டத்தை திருத்தியிருக்கிறோம்.

17–வது ஷரத்தைப் பார்த்தால் தகுதியுள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்களைச் சேர்க்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் சேர்க்கப்படவில்லை என்றால் அதன் மீது ரெஜிஸ்ட்ராருக்கு அப்பீல் செய்துகொள்ளலாம் என்று விதி போடப்பட்டிருக்கிறது. மேலும் கூட்டுறவு சங்கத்தில் இருக்கின்ற மெம்பர்களுக்கு நிர்வாகத்தில் இருக்கின்றவர்கள் தங்களுக்கு வேண்டியவர்களுக்குச் சலுகை காட்டுவதும், வேண்டாதவர்களுக்குச் சலுகை காட்டுவதில்லை என்றும், வேண்டாதவர்களுடைய கோரிக்கைகள் எல்லாம் புறக்கணிக்கப்படுகின்றன என்றும் அடிக்கடி புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. அவ்விதப் புகார்களுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதற்காக, இம்மாதிரியாக யாருக்காவது சலுகைகள் கிடைக்காவிட்டால், ரெஜிஸ்ட்ராருக்கு அப்பீல் செய்துகொள்ளுவதற்கு இதில் வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய மற்றொரு குறைபாடு என்னவென்றால், ஏதோ ஒரு சிலர்தான் நிர்வாகப் பொறுப்பில் எப்போதும் இருந்துகொண்டிருக்கிறார்கள். புதிதாக வருகின்றவர்களுக்கு இடம் கிடைப்பதில்லை என்கின்ற புகார்களும் இருந்துகொண்டிருக்கிறது. இந்த நிலைமையை மாற்ற வேண்டும் என்கின்ற அடிப்படையில் 28–வது ஷரத்தில் பொதுவாக அங்கத்தினர்கள் என்னென்ன கமிட்டிகளில் இருக்கலாம் என்பதை வரையறை செய்திருக்கிறோம். இதில் எந்தக் கமிட்டியில் இருந்தாலும் சரி, மூன்று டெர்ம்கள் தொடர்ந்தாற்போல் இருந்தால் அதன் பின்னால் இருக்க முடியாது என்கின்ற வகையில் திருத்தம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஒருவர் மத்திய சொஸைட்டியிலும் இருக்கலாம், அதே நேரத்தில் இன்னொரு சொஸைட்டியிலும் இருக்கலாம் என்றெல்லாம் இருந்ததுபோல் இனிமேல் இருக்கக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்போதுதான் எல்லோருக்கும் பரவலாக இந்தப் பொறுப்புக்களைப் பார்க்கக் கூடிய வாய்ப்புக் கிடைக்கும். ஸ்டேட் பாங்கில் ஒரு நிர்வாகஸ்தராய் இருக்கலாம். இதே நேரத்தில் லாண்ட் மார்ட்கேஜ் பாங்கிலும் நிர்வாகஸ்தராய் இருக்கலாம். இவ்விதம் இருந்தால் கூட்டுறவு இயக்கம் வளர்ச்சி அடைவதில் தடை ஏற்படும் என்ற அபிப்பிராயம் இருந்து வருகிறது. அதற்காக விதிகளைத் திருத்தி அமைக்க வேண்டும் என்ற அடிப்படையில் சில திருத்தங்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. ஆனால் இதுதான் சர்க்காருடைய முடிவுகள் என்று எடுத்துக்கொள்ள வேண்டாம். இதைப் பற்றி செலக்ட் கமிட்டியில் எந்த விதமான முறையில், ஆனால் சர்க்காருடைய நோக்கத்திற்கு எதிரிடையாக இல்லாமல், மாற்றி அமைக்க வேண்டுமோ, அவ்விதமாக ஆராய்ந்து மாற்றி அமைத்தால் அதை சர்க்கார் பரிசீலனை செய்வதற்குத் தயாராக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் இதனுடைய அடிப்படை என்னவென்றால், ஒருவர் எல்லா சொஸைட்டிகளிலும் இருந்து கொண்டு, வேறு பலருக்கு வாய்ப்பளிக்காத முறையில் இருந்துகொண்டு இருக்கக் கூடாது என்கின்ற நோக்கம்தான். இதில் ஏதாவது மாறுதல் செய்ய வேண்டும் என்றால், அதை ஆய்வுக் குழுவில் ஆராய்ந்து மாற்றி அமைத்தால் அதைச் சர்க்கார் கவனிக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தாற்போல், கூட்டுறவு பார்மிங்கைப் பொறுத்தளவில், சாகுபடி செய்பவர்கள் கூட்டுறவு சங்கத்தில் பல சிக்கல்கள் இருக்கின்றன. உதாரணமாக ஒருவர் கூட்டுறவு சாகுபடி சங்கத்தில் சேருவதற்குத் தங்களுடைய

நிலத்தைக் கொண்டுவந்து கொடுத்துவிடலாம். அதில் தண்ணீர் கிடைக்கும் என்ற வசதி இருந்தால், அதில் 5,000 அல்லது 10,000 ரூபாய் என்று செலவு செய்த பின்னுல், ஐந்தாறு மாதங்களுக்குள் அந்த நிலத்தின் சொந்தக்காரர் அந்த நிலத்தைத் திருப்பித் தந்துவிடுங்கள் என்று கேட்கின்றுர்கள். இதனுல் கூட்டுறவு சங்கத்திற்கும் பலவிதமான கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இதன் காரணமாக தனிப்பட்டவர்களுக்கு ஒரு விசேஷ சலுகை கொடுத்துவிடக் கூடியதாக இருக்கக் கூடும். கூட்டுறவு இயக்கத்திற்கே இடையூறு செய்ய வேண்டும் என்ற நோக்கத்தின் பேரிலேயே ஒருவர் நடு மத்தியில், இவ்விதம் கொடுக்கப்பட்ட நிலத்தை திருப்பி கொடுத்துவிடுங்கள் என்று சொல்லுவதாக இருந்தால் கூட்டுறவு சாகுபடி சொஸைட்டியே காலாவதியாகிவிடும். ஆனுல் இதில் யாரையும் கட்டாயப் படுத்திச் சேர்க்க விரும்பவில்லை. தாங்களாகவே அங்கத்தினர்களாகச் சேர வேண்டும். சேர்ந்தால் இந்தக் கூட்டுறவு சாகுபடிச் சங்கத்தில் குறைந்த பட்சம் ஐந்து வருடங்களாவது அங்கத்தினர்களாக இருக்க வேண்டும் என்ற ஒரு உடன்பாடு செய்துகொள்ள வேண்டும். அதற்குத் தகுந்த வாறு மாற்றி அமைத்துக்கொள்வதற்கு சொஸைட்டிகளுக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் பிரிந்து போக வேண்டுமென்ருல் அதற்கான நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று ஷரத்துக்களில் போட்டிருக்கிறேம். இந்த விதமாகப் போடப்பட்டிருக்கின்ற விதிகளை விவரமாக ஒரு அத்தியாயத்தில் போட்டிருக்கிறேம். இது தவிர, கூட்டுறவு ரெஜிஸ்ட்ராருக்கு பல நிர்வாக அலுவல்கள் இருக்கின்றன. இதோடு க்வாஸி ஜுடிஷியல் அலுவல்கள் பல இருக்கின்றன. நீதிமன்றத்தின் தீர்ப்பு அளிப்பது போன்று இதிலும் சில அலுவல்கள் இருக்கின்றன. நீதிப்படி அவர்கள் போடுகின்ற உத்தரவுக்கு மேல் சர்க்காருக்கு ரிவிஷன் செய்து கொள்வதற்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில் கூட்டுறவு டிரிபுனல் என்ற ஏற்பாடும் செய்யப்பட்டிருக்கிறது. பழைய முறையில் எக்ஸிக்யூடிவ் முடிவின் மீது சர்க்காருக்கு அப்பீல் செய்து கொள்வதற்கு எப்போதும் போல் உரிமை இருக்கிறது.

அடுத்ததாக, முக்கியமாகக் கூட்டுறவு சொஸைட்டியின் முக்கிய லட்சியம் என்னவென்ருல், மக்களிடத்தில் கிடைக்கின்ற பொருள்களை சேகரித்து அதை மக்களுக்கு வினியோகிப்பது என்கின்ற உயர்ந்த லட்சியத்தைத்தான் கூட்டுறவு சொஸைட்டிகள் வைத்துக்கொண்டிருக்கின்றன. அந்த விதமாக லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக, சர்க்காரிடமோ அல்லது ரிசர்வ் பாங்கியிடமிருந்தோ கடன் வாங்காமல் இருந்தால் அவற்றுக்கு சர்க்கார் சலுகை காண்பிக்க வேண்டும். அம்மாதிரிப்பட்ட சொஸைட்டிகளுக்கு பல ஷரத்துக் களிலிருந்தும் விதி விலக்கு அளிக்க வேண்டும் என்பது சர்க்காருடைய நோக்கம். 108-வது பிரிவில் 'ஸெல்ஃப் ரிலயன்ஸ்' சொஸைட்டிகளாக இருக்கும் ஸ்தாபனங்களுக்கு கொடுக்க வேண்டிய சலுகைகளைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு விலக்கு அளிப்பதன் மூலமாக பல கூட்டுறவு சொஸைட்டிகள் நல்ல முறையில் இயங்குவதற்கு உதவிகரமாக இருக்கும் என்று சர்க்கார் எதிர்பார்க்கின்றது.

அடுத்தபடியாக, சில சொஸைட்டிகளில் தங்களுடைய ஷேர் காப்பிடலைத் தவிர, வேறு கடன் வாங்குவதில்லை. இதன் காரணமாக 'பாரோயிங் பவர்' குறைவாக இருக்கிறது. இம்மாதிரிப்பட்ட சொஸைட்டிகளுக்கு சர்க்கார் உதவி செய்ய வேண்டும் என்று கருதியிருக்கிறது. இதைப் பற்றி ஆருவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரி உதவுவதற்காக இரண்டு முறைகள் இருக்கின்றன. ஒன்று மத்திய கூட்டுறவு பாங்குடன் சர்க்கார் ஷேர் காப்பிட்டல் போட்டுக்கொள்ளுவது. அதிலிருந்து பிரைமரி சொஸைட்டிகளுக்குக் கடன் கொடுத்து உதவுவது, ஸ்டேட் பார்ட்டனர்ஷிப்பை அதிகரித்துக்கொள்ளுவது ஒன்று. இதைப் பற்றி ஆருவது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில் அதிகமான பங்குத் தொகை பெறுவதற்கும் பாரோயிங் பவர் அதிகரிப்பதற்கும் வசதி ஏற்படும். இதன் காரணமாக கூட்டுறவு இயக்கம் வளருவதற்கு வாய்ப்பு ஏற்படும். அதோடு இப்போது புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் கன்னியாகுமரி, செங்கோட்டை, திருத்தணி முதலிய

30th March 1961] [Sri R. Venkataraman]

இடங்களுக்கும் இதை விஸ்தரிப்பதற்கு வேண்டிய ஷரத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதில் இப்போது நாம் விவாதிப்பது எல்லாம், இதை ஆய்வுக் குழுவுக்கு அனுப்புவதைப் பற்றித்தான். அதெல்லாமல் ஷரத்து வாரியாக விவாதம் நடத்தி, இதில் என்னைப் பதில் சொல்லும்படியாக கேட்பது முறையாக இருக்காது. அப்படி ஏதாவது சொல்லுவதாக இருந்தால் இப்போதே அதன் மீது முடிவு சொல்வது போல் ஆகிவிடும். ஆகவே இதைப் பற்றிப் பரிசீலனைக் கமிட்டியில் நன்றாகப் பரிசீலனை செய்து நல்ல முடிவுகள் எடுக்கப்படும் என்று நினைக்கிறேன். இந்தக் கமிட்டியில் கூட்டுறவு இயக்கத்தில் நல்ல அனுபவமுடையவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இதைப் பற்றி ஆராய்ந்து பார்த்து நல்ல முடிவுக்கு வரலாம் என்று நம்புகிறேன். ஆகவே என்னுடைய பிரேரணையை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961), be referred to a Select Committee of the House consisting of the following 20 Members of the Legislative Assembly :—

1. The Hon. Sri M. Bhaktavatsalam.
2. The Hon. Sri C. Subramaniam.
3. Sri C. R. Ramaswami.
4. Sri P. G. Karuthiruman.
5. Sri G. Narayanaswami Naidu.
6. Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran.
7. Sri A. P. C. Veerabahu.
8. Sri R. Krishnasami Naidu.
9. Sri K. S. Subramania Gounder.
10. Sri A. Mariappan.
11. Sri C. Muthiah.
12. Sri R. Subramaniam.
13. Sri V. K. Krishnamurthy.
14. Sri V. K. Ramaswamy Mudaliyar.
15. Sri P. K. Mookiah Thevar.
16. Sri S. M. Annamalai.
17. Sri A. Govindasami.
18. Sri M. Kalyanasundaram.
19. Sri P. S. Chinnadurai.
20. Sri M. Jagannathan.
21. The Hon. Sri R. Venkataraman."

There is also an amendment given notice of by Sri K. Sattanatha Karayalar. He may move it.

SRI K. SATTANATHA KARAYALAR: Sir, I move the following amendment :

"That the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961), be circulated for eliciting public opinion."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : Amendment moved—

"That the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961), be circulated for eliciting public opinion."

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமக்கு முன்னால் இப்போது விவாதத்திற்கு வந்திருக்கக்கூடிய மெட்ராஸ் கோ–ஆபரேடிவ் சொஸைட்டீஸ் பில்லின் பேரில் நான் விவாதத்தில் பங்கெடுக்கும் இந்த நேரத்திலே, குறிப்பாகக் கூட்டுறவு இயக்கம் மிக மிக அத்தியாவசியமானது, முக்கியமானது என்று சொல்லக்கூடிய நேரத்திலே, நூற்றுக்கு நூறு கிராமங்களிலே சொஸைட்டிகளை ஆரம்பித்து விட்டோம் என்று சொன்ன போதிலும் நூற்றுக்கு நூறு பேர்களும் அங்கத்தினர்களாகச் சேரவில்லை என்று சொல்லக்கூடிய நேரத்திலே, அதிலும் குறிப்பாகக் கூட்டுறவு இயக்கத்திலே எவ்வளவு பெரிய குற்றங்கள், எவ்வளவு பெரிய ஊழல்கள் இருந்து வருகின்றன. அதைத் தீர்த்து வைக்க முடியாத நிலைமையில் எல்லா அங்கத்தினர்களாலும் குற்றம் சாட்டக் கூடிய நிலைமையில், நமக்கு முன்னால் வரக்கூடிய இந்த மசோதா இருக்கிறதே, இது ஓரளவுக்கு நாம் வரவேற்கவேண்டிய விஷயம் என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த மசோதாவிலே குறிப்பாக என்ன வருகிறது என்பதைப் பார்க்கக் கூடிய நேரத்திலே, ஒரே நபர் எத்தனை சொஸைட்டிகளுக்கு வேண்டுமானாலும் தலைமை தாங்கலாம் என்கிற ஒரு முறைக்கு வரம்பு கட்டுவதும், அதே போன்று ஏற்படக்கூடிய தவறுதல்களை உடனுக்குடன் விசாரணை செய்து அதைத் தீர்த்து வைப்பதற்காக வேண்டி ஒரு கோ–ஆப்பரேட்டிவ் ட்ரிப்யூனல் அமைக்க வேண்டிய அளவுக்கு நிலைமை இருக்கிறதே, அது மிகவும் முக்கியமாக வரவேற்க வேண்டிய அம்சம்.

அடுத்தபடியாக இந்த பில் நேற்றுத்தான் கொடுக்கப்பட்டது, முழுக்க முழுக்க படிக்க முடியவில்லை என்று சொன்ன போதிலும் படித்துத் தெரிந்த வரையில் சொல்ல ஆசைப்படுகிறேன். கனம் அமைச்சர் கூட படிக்கவில்லைபோல் இருக்கிறது. அங்கத்தினர்கள் இதையெல்லாம் தவறாக எண்ணிக் கொள்ளக் கூடாது என்று முன் கூட்டியே சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன் : தவறாகச் சொன்னாலும் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும் என்று சொல்லுகிறீர்களா ?) கேட்டுக்கொண்டு இருக்க வேண்டும் என்று சொல்லவில்லை—தவறாக இருந்தால் சொல்லலாம். இதில் ஒரு பயம் என்ன என்றால் ஏதாவது தவறு ஏற்பட்டால், விசாரணை செய்து தீர்ப்புச் சொல்லுவதற்கே பல ஆண்டு காலம் ஆகிறது. 10 வருஷம், 12 வருஷம் நீடிக்கக்கூடிய பல வழக்குகளும் உண்டு. இது போன்ற ஒரு நிலைமையில் கோ–ஆப்பரேடிவ் ட்ரிப்யூனல் வருமானால், முதலில் அதிகாரிகள் விசாரணை செய்து அதற்குப் பிறகு அது சரியில்லை என்று சொல்லக்கூடிய நிலைமையில் ட்ரிப்யூனலுக்குப் போய் அந்தக் கோர்ட்டின் தீர்ப்பும் சரியில்லை என்று ஏற்படுமானால், ஹைக்கோர்ட், சுப்ரீம் கோர்ட் போன்ற கோர்ட்டுகளுக்குப் போகக்கூடிய நிலைமை இருக்கிறதா இல்லையா என்று திட்டவட்டமாகத் தெரிய வேண்டும். அந்த மாதிரி ஹைகோர்ட்டுக்கும், சுப்ரீம் கோர்ட்டுக்கும் போகக் கூடிய நிலைமை இருக்குமானால், அது இப்போது இருப்பதை விட இன்னும் நீண்ட காலம் நீடிக்கக்கூடிய ஒரு சந்தர்ப்பத்தை இந்த மசோதா கொடுக்கக் கூடிய அளவுக்கு ஏற்படுமே என்கிற நிலைமையையும் கனம் அமைச்சர் அவர்கள் கொஞ்சம் நன்றாகச் சிந்தித்துப் பார்த்து அந்த அளவுக்கு நீடிக்க முடியாத நிலைமை இருக்க வேண்டும் என்பதுதான் எனது விருப்பம். முடிந்தால் கோ–ஆப்பரேடிவ் ட்ரிப்யூனல் தீர்ப்பையே அமுல் படுத்தும் அளவுக்கு இருக்க வேண்டும். அதற்கு மேல் போகக்கூடிய அளவுக்கு நிலைமை இருக்குமானால் நீண்ட காலம் கண்டிப்பாக ஏற்படும் என்ற காரணத்தினால் இந்த ஆலோசனையை இந்தச் சந்தர்ப்பத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

30th March 1961] [Sri V. K. Kothandaraman]

அதே போன்று, குற்றம் செய்தவர்கள், அவர்கள் தண்டிக்கப்படுவார்களேயானால், மீண்டும் 5 வருஷமோ அல்லது 6 வருஷமோ ஆன பிறகு தான் அந்த சொஸைட்டியில் அங்கம் வகிக்கக்கூடிய அளவுக்குத் தகுதி உடையவர் ஆவார்கள் என்று இருக்கிறது. ஏற்கனவே இருக்கக்கூடிய சட்டத்தில் ஒன்றும் மாறுதல் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. எதற்காகச் சொல்லுகிறேன் என்று சொன்னால், ஆயிரக்கணக்கான ரூபாயைக் கையாடிவிட்டு, கூட்டுறவு இயக்கப் பணத்தை விரயம் செய்தவர்கள் 5 வருஷத்திற்குப் பிறகு, 6 வருஷத்திற்குப் பிறகு, மீண்டும் கூட்டுறவு இயக்கத்திலே வரக்கூடிய நிலைமை இருக்குமேயானால், மீண்டும் தவறுகள் செய்யக்கூடிய நிலைமை இருக்கும். ஆகவேதான் இதை மேலும் நீடிக்கக் கூடிய அளவுக்கு நிலைமை இருந்தால் நலமாக இருக்கும்.

அதே போன்று இந்த இலாகாவிலே அதிகாரத்தில் இருக்கக்கூடியவர்கள் எந்தக் குற்றம் குறைகளிலே ஈடுபடுகிறார்கள் என்று சொன்னால் கண்டிப்பாக அந்தக் குற்றம் குறைகள் செய்யக்கூடியவர்கள் எந்த சொஸைட்டியிலும் அங்கம் வகிக்கக்கூடிய அளவுக்கு அனுமதிப்பது சரியாகாது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இதற்கு முன்னால் அது போன்று 10,000 கணக்கான ரூபாய் கையாடிவிட்டு கோர்ட்டுகளால் தீர்ப்பளிக்கப்பட்டு, தண்டனை அடைந்து சிறையில் இருந்துவந்தவர்கள் 5 வருஷத்திற்குப் பிறகு மீண்டும் அவர்கள் பல சொஸைட்டிகளிலே தலைவர்களாகவோ, அல்லது காரியதரிசிகளாகவோ அல்லது கமிட்டியிலோ இருக்க சந்தர்ப்பம் கொடுப்பதின் காரணமாக மக்கள் மத்தியில் அதிருப்தி ஏற்பட்டு இருக்கிறது. அப்படி அதிருப்தி ஏற்படுகிற காரணத்தினால் கூட்டுறவு இயக்கமே நல்ல முறையில் நடைபெற முடியாத நிலைமை இப்போது பல இடங்களிலே இருக்கிறது என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். ஆகவேதான், இது போன்ற விஷயங்களில் ஒழுங்காக நடக்கக்கூடிய அளவுக்கு நிலைமை இருக்க வேண்டும். அதிகாரிகள் தவறு செய்கிறார்கள் என்று சொன்னால் மீண்டும் இது போன்ற சொஸைட்டிகளில் இருக்க இடம் இருக்கக் கூடாது என்பது எனது அபிப்பிராயம்.

அதேபோன்று இன்றைக்கு எக்ஸ்—சர்வீஸ்மென் இருக்கக்கூடிய சொஸைட்டிகளுக்கும், இன்றைக்குக் குற்ற பரம்பரையைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்களே அவர்களை வாழ வைக்க வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தக் கூடிய சொஸைட்டிகளுக்கும் இது போன்று தவறுகள் செய்யப்பட்டாலும் விதி விலக்கு இருக்க வேண்டும் என்று இருப்பதாகத் தெரிகிறது. எனவே இன்றைக்கு எக்ஸ்—சர்வீஸ்மென்களுக்காக இருக்கக்கூடிய சொஸைட்டிகள் இருக்கிறதே அதில் தவறுகள் ஏற்படுகிறது என்றுசொன்னால் அவர்களுக்கு இது பொருந்தாது. விதி விலக்கு கொடுக்கவேண்டும் என்று இருப்பது அவ்வளவு சரியாக இருக்க முடியாது. ஆனால் மலைவாசிகளோ, அல்லது குற்ற பரம்பரையைச் சேர்ந்தவர்களோ இருக்கிறார்கள் என்றால் இன்றைக்கு பெருமளவுக்கு அவர்களுடைய முன்னேற்றத்திற்காக வேண்டி அவர்களுக்கு விதி விலக்குக் கொடுக்க வேண்டும் என்று இருப்பது சரி—அதை வரவேற்கிறேன். ஆனால் அதே போன்று எக்ஸ்—சர்வீஸ் மென் கோ—ஆபரேட்டிவ் சொஸைட்டிகளுக்குக் கொடுப்பது அவ்வளவு சரியாக இருக்காது என்று கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

சொஸைட்டிகளில் நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பதிலே ரகசிய ஓட்டெடுப்பு முறை இருக்க வேண்டும். கூடுமான வரையில் பல சொஸைட்டிகளில் அவரவர்கள் இன்றைக்கு பைலாஸ் ஏற்படுத்திக்கொள்ளுகிறார்கள். அதைப் பற்றி அரசாங்கம் திட்டவட்டமாகப் பார்க்க முடியவில்லை. பைலாஸ் ஏற்படுத்தக்கூடிய நேரத்திலே அதிலே கை தூக்கி வோட்டு அளிக்கும் முறையில் தேர்ந்தெடுக்கலாம் என்று வரக்கூடாது. ரூல்ஸில் இருந்தாலும், ஆக்டில் இருந்தாலும் அவ்வளவும் ரகசிய ஓட்டு எடுப்பு முறையில் நடத்தப்பட வேண்டும் என்று இருந்தால் தான் ஒழுங்காக இருக்க முடியும். அப்போதுதான் ஏற்படக்கூடிய ஊழல்களைக் கூட ஓரளவுக்கு தடுக்க வசதி செய்வது போலாகும். இதில் நாம் இடம் கொடுக்கிறோம் என்றால்

[Sri V. K. Kothandaraman] [30th March 1961

பைலாவில் அவர்கள் பிரியம்போல கை தூக்கி ஓட்டு அளிக்கும் முறையைக் கொண்டுவருவார்கள். அதன் மூலம் ஊழல்கள் ஏற்படும். இன்றைக்கு ஸ்டேட் லெவலிலே, டிஸ்ட்ரிக்ட் லெவலிலே இருக்கக்கூடிய சொஸைட்டி களில் இரண்டு சொஸைட்டிகளில் அங்கம் வகிக்கலாம் என்ற நிலைமை இருக்கிறதே அது வரவேற்க வேண்டிய விஷயம்தான். இது ஒரு சில ருக்குப் பிடிக்காமலும் இருக்கலாம். இன்றைக்கு இந்தக் கூட்டுறவு இயக் கத்திலே தலைமை தாங்கி நடத்த ஒருவரும் இல்லாமல் எங்கள் தலை மையிலேயே போட்டு வேடிக்கைப் பார்க்கிறீர்கள் என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். ஆகவே இது போன்ற ஒரு நிலைமை ஏற்படுமேயானால் இந்த கூட்டுறவு இயக்கமே நாசமாகப் போய்விடும், அழிந்துவிடும், ஆகவே இது கூடாது. எத்தனை சொஸைட்டிகளில் வேண்டுமானாலும் இருக்கலாம் என்று இருக்கவேண்டும் என்று சொல்லலாம். ஆனால் இன்றைக்கு உண்மையிலேயே கூட்டுறவு இயக்கத்திலே தலைமை தாங்கி நடத்தக் கூடியவர்களில் நல்ல முறையில், சரியான முறையில் நடத்தக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று சொன்னாலும், இந்தக் கை தூக்கும் வோட்டு முறை காரணமாகவும், சட்டத்தில் இருக்கும் குறைபாடுகள் காரணமாகவும்தான் நல்ல திறமை மிக்கவர்கள் சொஸைட்டிகளில் இருந்து செயலாற்றக்கூடியவர்கள் வர முடியாத நிலைமை இருக்கிறதே தவிர, மற்றப்படி வந்திருந்து பங்கெடுக்கக்கூடாது, இந்த இயக்கமே கூடாது என்று ஒதுங்கியிருக்கக் கூடியவர்கள் இருக்க மாட்டார்கள் என்பது எனது அபிப்பிராயம். ஆகவே அந்த அளவுக்கு வரவேற்க வேண்டும் என்பதை இந்த நேரத்திலே தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

10-30 a.m. அதேபோன்று சர்க்கார் பங்கெடுக்கக்கூடிய சொஸைடிகளுக்கு மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் சர்க்கார் பிரதிநிதிகள் இருக்கக்கூடாது என்கிற ஒரு முறையும் இருக்கிறது. இன்றைக்கு சர்க்கார் பங்கு 50 சதவிகிதத்துக்கு மேலே இருக்கிறதென்று சொன்னால், இதிலே அந்த அளவுக்கு அந்த சதவிகிதத்திற்கு சர்க்காரின் பிரதிநிதித்துவமும் இருப்பதுதான் நலமாக இருக்க முடியும். சரியாக இருக்க முடியுமென்பதும் என்னுடைய அபிப் பிராயமாகும். ஆனால் கனம் அமைச்சர் அவர்கள் சொல்லலாம் இன் றைக்கு பொது மக்கள் இருப்பது தான் ஜனநாயகம், ஆகவே பொது மக்களிடத்திலே ஒப்படைத்திருக்கிறோம், ஆகவே அவர்கள் நிர்வகிக்க வேண்டுமென்று சொல்லலாம். நான் ஜனநாயக அடிப்படையிலே பொது மக்களை அனுமதிக்கக் கூடாதென்றோ, அவர்களிடத்தில் நிர்வாகப் பொறுப்பை விடக் கூடாது என்றோ சொல்லவில்லை. சர்க்கார் எந்த அள வுக்கு பங்கெடுத்துக் கொள்கிறார்களோ, அந்த அளவுக்கு அவர்களுடைய பிரதிநிதித்துவமும் அதிலே இருக்க வேண்டுமென்று தான் சொல்கிறேன். மூன்றில் ஒருபகுதி என்ற அளவுக்கு வரையறுக்கக் கூடிய ஒரு நிலைமை இருக்கக் கூடாதென்பதைத் தான் நான் இந்த நேரத்திலே தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த கூட்டுறவு இயக்கமானது நல்ல முறையிலே நடைபெற வேண்டு மானால், அதிலே ஏற்படக்கூடிய ஊழல்களை உடனடியாக விசாரணை நடத்தக் கூடிய அளவுக்கு ஒரு நிலைமையை ஏற்படுத்தி, எவ்வளவு சீக் கிரத்தில், எவ்வளவு குறுகிய காலத்தில் விசாரணை செய்து, முடிக்க முடியுமோ அந்த அளவுக்கு இதில் நாம் ஒரு ஷரத்தை உண்டாக்கக்கூடிய நிலைமை இருக்க வேண்டும். அதேபோன்று ரகசிய ஓட்டு முறைகளின் மூலமாகத் தான் அந்தந்த கமிட்டிகளும் அமைக்கப்பட வேண்டும், தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமென்பதைத்தான் நான் இதன் மூலமாக முக்கிய மாகத் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். பொதுவாக இந்த மசோதா வரவேற்க வேண்டிய ஒரு மசோதா. ஆகவே இந்த மசோதாவில் ஊழல்கள் செய்ய கூடியவர்கள் 5 வருஷத்திற்கு மேலும் மறுபடியும் இருக்கலாம், அதிலே சேரலாம் என்று ஒரு கால வரம்பு இருக்கிறதே, அதை மேலும் இரட்டிப்பாக்கப்பட வேண்டும். அந்த அளவுக்கு இருப்பது தான் நலமாக இருக்க முடியும். காரணம் ஏற்கெனவே இருக்கக்கூடிய அதே சட்டத்தை மீண்டும் இதிலே புகுத்தப்பட்டிருக்கிறது என்கிற காரணத் தினால்தான், இது வரையிலே அந்த அடிப்படையிலே நாம் பார்த்தோம். அந்த அளவுக்கு மீண்டும் தொடர்ந்து ஊழல்கள் ஏற்படாமல் இருக்கும்படிச்

செய்வதற்கு 5 வருஷம் என்பதை 10 வருஷமாக நீடிப்பது நலமாக இருக்கும் என்பதை மீண்டும் தெரிவித்துக் கொண்டு, இந்த மசோதா வரவேற்கக்கூடிய ஒரு மசோதா என்று கூறிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

SRI K. R. NALLASIVAM : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, பொதுவாக நீண்ட நாட்களாக இருந்துவரும் கூட்டுறவு இயக்க சட்ட திட்டங்களை மாற்றித் தொகுத்து கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கைக்கு இன்று இங்கே சர்க்கார் இதுபோன்ற ஒரு மசோதாவைக் கொண்டு வந்திருப்பதை நான் மனப்பூர்வமாகப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இன்றைக்கு மக்களிடத்திலே பொதுவாக கூட்டுறவு சங்கங்கள் வேண்டு மென்ற கோரிக்கைகள் இருந்தபோதிலுங்கூட, அவர்களிடத்திலே கூட்டுறவு மனப்பான்மை மனப்பூர்வமாக இருக்கிறதா என்று பார்த்தால், உண்மையிலேயே நாம் எண்ணுகின்ற அளவுக்கு அவர்களிடத்திலே கூட்டுறவு மனப்பான்மை இல்லையென்று தான் சொல்ல வேண்டும். எதையும் சுதந்திரமாக நிர்வகிக்க வேண்டும், எந்தத் தொழிலானாலும் அதைத் தனிப்பட்ட முறையில் சுதந்திரமாகச் செய்ய வேண்டுமென்ற மனப்பான்மை தான் இன்றைக்கு மக்களிடத்திலே இருக்கிறது. கூட்டுறவு என்றாலே அதைத் தவருக நினைக்கிறார்கள். கூட்டுறவு என்பது தவறல்ல ; கூட்டுறவு மூலம் லாபமடைய முடியும். அதிலே இன்னென்ன ஏற்றத் தாழ்வுகள் இருக்கிறது என்று புரிந்து கொள்ளக்கூடிய எண்ணம் சமூகத்தில் மிகக் குறைவாக இருக்கிறது. அவர்கள் முழுக்க முழுக்க இப்படி இருப்பதற்குக் காரணம் அவர்களால் இதைப் புரிந்துகொள்ள முடியாததே என்று நான் நினைக்கிறேன். அதற்கு முதலிலே இந்த கூட்டுறவு சட்டத்திலே எவ்வளவு பெரிய நன்மைகள் எல்லாம் இருக்கிறது, இந்தச் சட்டத்தினால் சமூகம் எந்த அளவுக்கு உயர முடியும் என்பதற்கான பிரசாரத்தை அரசாங்கம் துரிதமாகவும், தீவிரமாகவும் செய்யவேண்டும். அப்படி ஒரு நல்ல முறையிலே மக்களிடையே பிரசாரம் செய்தால்தான், அவர்களால் ஓரளவுக்கு இதன் நன்மைகளை நன்கு புரிந்துகொள்ள முடியும். அப்படியல்லாமல் இதைச் சட்டமாக்கி நாம் வெளியிடுவதால் எந்த விதமான பிரயோஜனமும் இருக்க முடியாது. மக்களுக்கு கூட்டுறவு மனப்பான்மை குறைவாக இருந்தாலும், நாம் இன்றைக்கு நல்லமுறை யிலே செய்யக்கூடிய பிரசாரத்தினால் தான் அவர்களுடைய மனப்பான் மையை மாற்ற முடியும். அப்போதுதான் இப்படிப்பட்ட சட்டங்கள் எல்லாம் பயனுள்ளதாக இருக்க முடியும்.

இந்த ராஜ்யத்திலே இன்றைக்கு தேசம் பூராவிலும் விவசாயிகள் தான் பெருவாரியாக இருக்கின்றனர். அவர்களிலே இன்றைக்கு எடுத்துக் கொண்டால், சர்க்கார் கொடுக்கின்ற புள்ளி விவரங்களின்படி கணிசமான அளவுக்குத் தென்பட்ட போதிலும்கூட, அவர்களில் பெரும்பாலோர் கடன் வேண்டுமென்பதற்காகத்தான் இந்த கூட்டுறவு சங்கங்களிலே ஈடுபடுகின் றனரே தவிர, மீதி தொழில்கள் மூலமாக அதை லாபகரமாகச் செய்ய முடியும் என்று அவர்கள் முன்வருவதில்லை. இது என் சொந்த அனுபவத்தில் நான் கூட்டுறவு சங்கங்கள் அமைப்பதற்கு முயற்சி எடுத்துக் கொண்டபோது கண்டறிந்தது. அப்போதெல்லாம் விவசாயிகள் உற்சாகக் குறைவாகத்தான் இருக்கிறார்கள். ஆகவே தான் இதை நான் திரும்பத் திரும்பச் சொல்ல விரும்புகிறேன். பொதுவாக சட்டத்தை நாம் எந்த அளவுக்கு நல்ல முறையிலே அமுல் செய்தாலும், நாம் நினைக்கிறபடி திட்டம் நல்ல முறையிலே கைகூட வேண்டுமானால், விவசாய மக்களிடையே நல்ல முறையிலே தீவிரப் பிரசாரம் செய்து, அவர்களிடையே உள்ள சந்தேகங்களை யெல்லாம் களைய வேண்டும்.

அதேபோல், ஏதோ ஒரு சில கூட்டுறவு சங்கங்களில் நடக்கின்ற ஊழல்கள் தான் பெரிதாக அவர்களுடைய கண்களுக்குப் படுகின்றது. அங்கே கூட்டுறவு சங்கம் இருக்கிறதே, இங்கே கூட்டுறவு சங்கம் இருக்கிறதே அவற்றிலெல்லாம் என்னென்ன ஊழல்கள் நடக்கிறது என்பதுதான்

[Sri K. R. Nallasivam] [30th March 1961

அவர்களுக்குத் தெரிகிறது. அதைத்தான் அவர்களால் பேசப்பட்டும் வருகிறது. அந்த சங்கங்களிலே இருக்கக்கூடிய நன்மைகளை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. கஷ்டங்கள் தான் அவர்களுக்குத் தெரிகிறது. இவைகளை என்னுடைய நேரடியான அனுபவத்தைக் கொண்டு சொல்கிறேன். ஆகவே இதைப் பொறுத்த அளவிலும் நாம் இதை நல்ல முறையிலே அமைக்க வேண்டுமானால், அதற்கும் முக்கியமாக பிரசாரம் தான் தேவை. நல்ல முறையிலே பிரசாரம் செய்து அவர்களுடைய உள்ளத்திலே ஒரு வித நல்ல கிளர்ச்சியை உண்டுபண்ணி அவர்களுடைய மனதை தெளிய வைக்க வேண்டியது மிக அவசியம். அப்போதுதான் ஜனங்களிடத்திலே ஒரு நம்பிக்கையை வளர்க்க முடியும்.

இன்றைக்கு இருக்கக்கூடிய கூட்டுறவு சங்கங்களிலே 10-க்கு 4 தான் ஏதோ நல்ல முறையிலே நடக்கின்றதே தவிர, பாக்கி 10-க்கு 6 சங்கங்கள் பெயரளவுக்குத் தான் இருக்கிறது. அவைகளிலே பல தவறுகளை வைத்துக்கொண்டு தான் இன்றைக்கு கூட்டுறவு சங்கங்கள் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. இந்த குறைபாட்டையும் நிவர்த்தி செய்வதற்கான முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும். அதோடு இன்றைக்கு கூட்டுறவு சங்கங்களிலே ஏதாவது பங்குத் தொகையாக கொடுக்கக் கூடியதில் ஹரிஜனங்களுக்கும், பிற்பட்ட இனத்தைச் சார்ந்தவர்களுக்கும் சலுகைகள் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு அவ்விதமான சலுகைகள் கொடுப்பதற்கு முயற்சிகள் எடுத்துக் கொண்டால்தான், அவர்களும் இதிலே பங்கு பெற்று கூட்டுறவு இயக்கமானது பரிபூரணமாக விளங்க முடியும்.

விவசாய கூட்டுறவைப் பொறுத்த வரையில், விவசாயக் கூட்டுறவு சங்கங்கள் நல்ல முறையிலே நடப்பதில் கவனம் செலுத்த வேண்டும். நம்முடைய ராஜ்யத்திலே விவசாய கூட்டுறவு சங்கங்கள் இப்போது நாம் எண்ணக்கூடிய அளவில் நல்ல முறையில் நடக்கவில்லை. இதை என்னுடைய சொந்த அனுபவத்தைக் கொண்டு சொல்ல முடியும். அப்படி ஒரு சில விவசாய கூட்டுறவு சங்கங்கள் நடைபெற்றாலும், ஏதோ பெயருக்குத் தான் நடைபெறுகிறது என்று சொல்ல வேண்டும். பொதுவாக இந்த கூட்டுறவு சங்கங்களை நல்ல முறையில் நடத்தினால், நாம் சோஷலிச பாதையில் முன்னேறுவதற்கு தடையில்லாமல் இருக்குமென்று நான் நம்புகிறேன். இன்றைக்கு சொந்தமாக சிறு நிலங்களை வைத்துக்கொண்டு விவசாயிகள் சங்கம் ஆரம்பிப்பதிலே சில கஷ்டங்கள் இருக்கிறது. ஆகவே இந்த இனும் நிலங்கள், கோவில் நிலங்கள், தேவதாய நிலங்கள், இன்னும் பல்வேறான நிலங்களை அவர்களுக்கு கொடுக்க வேண்டும். கோயம்புத்தூரில் சில பகுதிகள் கோவிலுக்குச் சொந்தமா, அல்லது அதை பல ஆண்டுகளாக அனுபவித்துக்கொண்டு ஊழியம் செய்து வரும் விவசாயிகளுக்குச் சொந்தமா என்ற நிலைமை இருந்து வருகிறது. அவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து, கூட்டுறவு சங்கம் அமைப்பதற்கான வகையில் முயற்சி எடுத்துக் கொள்ளக் கூடிய வகையில் இந்த மசோதாவிலே ஷரத்துக்கள் இருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன்.

இன்றைக்கு மதச் சார்புள்ள நிலங்கள் பல இடங்களில் இருக்கிறது. வருகின்ற நிலச் சீர்திருத்தத்தின் கீழ் கூட பல நிலங்கள் கூட்டுறவு சங்கத்தின் கீழ் கொண்டு வரப்படாமல் பல தர்ம ஸ்தாபனங்கள், மதச் சம்பந்தமான நிலங்கள், தனிப்பட்ட முறையில் வைத்திருக்கக்கூடிய நிலங்கள் முயற்சி செய்யப்பட்டு வருகிறது. பொதுவாக அவர்கள் தாங்களாகவே விவசாயம் செய்வார்கள் என்று எதிர்பார்த்தால் பயன் கிடைக்காது. விவசாயம் செய்யாமல், தப்பித்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம், கருத்து அவர்களிடம் இருக்கிறது. ஆகவே, தனிப்பட்ட விவசாயிகளை கட்டாயமாக கூட்டுறவு முறையை கையாள வேண்டுமென்று நிர்ப்பந்திப்பதைவிட, மத ஸ்தாபனங்களுக்கும், தர்ம ஸ்தாபனங்களுக்கும் சொந்தமான நிலங்களை கட்டாயமாக கூட்டுறவு இயக்கத்தின் கீழ் கொண்டு வர வேண்டும் என்று இந்த மசோதாவிலே ஒரு இடம் செய்துவிட்டால் பயன் உள்ளதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

30th March 1961] [Sri K. R. Nallasivam]

அடுத்தபடியாக, நெசவாளர்களைப் பொறுத்தவரையில் ஒருபகுதி பேர்கள் தான் கூட்டுறவு இயக்கத்தில் இருக்கிறார்கள். பெருவாரியான பேர்களை, அநேகமாக நெசவு செய்யக்கூடிய எல்லோரையுமே கூட்டுறவு சங்கங்களின் கீழ் கொண்டுவரக்கூடிய அளவிலே, அதற்குத் தகுந்த முறையை கையாள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மசோதாவை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு விடுவதற்குப் பதிலாக பொது மக்களுடைய கவனத்திற்கு விட்டால், இன்னும் வசதியாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை நான் முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI T. SAMPATH : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்களுடைய பிரேரேபணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள் ; 'இது 1932-ம் ஆண்டிலே இயற்றப்பட்ட ஒரு சட்டம்.' பிறகு இதுபற்றி பரிசீலனை செய்து நாராயணசுவாமி பிள்ளை கமிட்டி ரிப்போர்ட்டு சமர்ப்பித்திருக்கிறது. மற்ற ரிப்போர்ட்டுகள் பற்றி கூட கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். 'ஆப்ஜெக்ட்ஸ் அண்டு ரீஸன்ஸ்'-ல் கூட, நடைமுறையிலே 28-ம் ஆண்டிலே இந்தச் சட்டம் எப்படி அமுல் நடத்தப்பட்டு வந்தது என்பதை பரிசீலனை செய்து, இதிலே நிர்வாகத் துறையிலே இருக்கக்கூடிய கஷ்டங்களை நீக்கும் முறையில் இந்தச் சட்டம் திருத்தி அமைக்கப்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இந்த மசோதாவிலுள்ள பிரிவுகளைப் பரிசீலனை செய்து பார்த்தால், இன்னும் நிர்வாகத் துறையிலே சில கஷ்டங்கள் இருக்கத்தான் செய்கிறது. அதையெல்லாம் நாமும் பரிசீலனை செய்து இந்தப் பிரிவுகளை மாற்றி அமைக்க வேண்டும் என்று குறிப்பிட நான் விரும்புகிறேன்.

கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பாக சில அம்சங்களைப்பற்றி குறிப்பிட்டார்கள். Unlimited liability to limited liability என்று அந்தப் பிரிவு மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அது மிகவும் வரவேற்கக்கூடிய ஒரு விஷயம். ஏனென்றால் 'அன்லிமிடெட் லையபிலிடி' என்றால், கூட்டுறவு சங்கத்தில் சேவை செய்வதற்கு எல்லோருமே அச்சப்படுவார்கள். அல்லது அதில் உத்தியோகம் வகிப்பவர்களுக்கு பெருத்த அளவிலே பயத்தை கொடுக்கக்கூடிய ஒரு நிலை ஏற்படுகிறது. Unlimited liability to limited liability என்று முன்பே திருத்தி அமைத்திருக்கிறோம். நாற்பத்தொன்பதாவது பிரிவிலே, 'Liability to be limited in respect of certain shares' என்று குறிப்பிட்டிருக்கிறது. அது வரவேற்கக்கூடிய விஷயம். 'லிமிடெட் லையபிலிடி' அதாவது 'லையபிலிடி' மிகவும் குறைவு. அதாவது ஒரு கூட்டுறவு சங்கத்திலே நஷ்டம் ஏற்பட்டால் எந்த அளவில் அங்கத்தினர்களோ, தலைவர்களோ அல்லது காரியதரிசிகளோ பொறுப்பு ஏற்கவேண்டும் என்று நிர்ணயிக்கப்படுகிறது. அந்த அளவிலே இது மிகவும் வரவேற்கக்கூடிய விஷயம் என்று தான் நான் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தாற்போல், 17-வது பிரிவைப் பார்த்தால் அதில் 'குவாலிபிகேஷன் ஆப் மெம்பர்ஸ்' வரையறுக்கப்பட்டிருக்கிறது. அது மிகவும் வரவேற்கக் கூடிய விஷயம். இதுவரையிலும் கூட்டுறவு சங்கங்களில் எல்லோரும் அங்கம் வகிப்பது மிகவும் கஷ்டமான காரியம். இது மிகவும் சிரமமான காரியமாக இருந்தது. இப்பொழுது இந்தப் பிரிவை நன்றாக அமைத்திருக்கிறார்கள். ஆனாலும், இந்த 17-வது பிரிவு இன்னும் பரிசீலனை செய்யப்படவேண்டும் என்று பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். 18-வது பிரிவிலே 'டிஸ்குவாலிபிகேஷன்' பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. அதிலே சில குறைபாடுகள் இருக்கின்றன. அதையும் நாம் பரிசீலனை செய்து திருத்தி அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, 28-வது பிரிவிலே கமிட்டிகளில் அங்கம் வகிப்பது சம்பந்தமாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிலே கனம் அமைச்சர் அவர்கள் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார்கள். அதாவது தொடர்ந்து சில பேர்களே சில

பொறுப்புகளை ஏற்று நடத்தக்கூடிய ஒரு நிலைமை இருக்கிறது. அதை மாற்ற வேண்டுமென்று குறிப்பிட்டார்கள். அதன் காரணமாக இந்தப் பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். மூன்றுவது உப பிரிவிலே '**A member of the Committee of a registered society shall not be eligible for re-election to the Committee of that society until such period, not being less than two years..**' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது கொஞ்சம் சங்கடம் விளைவிக்கும் என்று நினைக்கிறேன். நான்காவது உப பிரிவிலே '**A member of the committee who has held office for three or more terms successively immediately before the commencement of this Act shall not be eligible for election as a member for a further term immediately on the expiry of the term of office held by him**' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதுவும் கொஞ்சம் சங்கடம் விளைவிக்கும். அனுபவம் வாய்ந்தவர்கள் கமிட்டிகளில் இருப்பது ஒரு நல்ல விஷயம். அனுபவம் வாய்ந்தவர்களை நாம் இழந்து விடக்கூடுமோ என்ற ஒரு எண்ணம் தோன்றுகிறது. இதைப் பொறுக்கு கமிட்டி கொஞ்சம் பரிசீலனை செய்யவேண்டும். அனுபவம் வாய்ந்தவர்கள் இருந்தால் தான் இந்த இயக்கம் நல்ல முறையில் நடப்பதற்கு வழி ஏற்படும். '**Three or more terms**' என்று போட்டிருப்பது கொஞ்சம் சிக்கலை உண்டாக்கும் என்று நினைக்கிறேன். நல்ல அனுபவம் வாய்ந்தவர்களை இழக்கக்கூடிய நிலைமை உண்டாகுமோ என்று தோன்றுகிறது. ஆகவே, இந்தப் பிரிவை நன்கு பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, 6-வது சாப்டர் இருக்கிறதே அது நல்ல 'சாப்டர்'. அதாவது, இந்த இயக்கமானது நல்ல முறையிலே விஸ்தரிக்கப்பட்டு பல துறைகளில் அபிவிருத்தி அடைந்து வருகிறது. அதற்கு ஒரு ஆதரவு கொடுக்கக்கூடிய வகையில் இந்தப் பிரிவு அமைந்து இருக்கிறது.

அடுத்தாற்போல சாப்டர் 10, அதாவது 74—81 பிரிவுகள் கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்கும் விஷயமாக இருக்கக்கூடிய பிரிவுகள். அதிலும் சில சங்கடங்கள் இருக்கின்றன. இந்தப் பிரிவுகளை நன்கு பரிசீலனை செய்ய வேண்டும். ஏனென்றால் 'பார்மிங் சொஸைடீஸ்' அமைப்பதிலே பல கஷ்டங்கள் இருக்கின்றன. முக்கியமாக, திரு நல்லசிவம் அவர்கள் குறிப்பிட்டார்கள் : இம்மாதிரி சொஸைடிகள் அமைப்பதிலே மக்களிடையே, குறிப்பாக விவசாயிகளிடையே, ஒரு நம்பிக்கை ஊட்டக்கூடிய அளவில் இந்தப் பிரிவுகள் அமையவேண்டும். இந்த வகையிலே இந்தப் பிரிவுகளை திருத்தி அமைக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தாற்போல சாப்டர் 11, அதாவது 82—87-வது பிரிவுகளிலே 'வைண்டிங் அப்'-ஐப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது ; 'லிக்விடேடர் அபாயிண்டுமெண்டு' அவருடைய அதிகாரங்கள், இவைகளெல்லாம் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பிரிவுகளை நன்கு பரிசீலனை செய்யவேண்டும். 'லிக்விடேஷன்' சம்பந்தமாக பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இதையெல்லாம் நன்கு பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக ரிஜிஸ்டிராருடைய அதிகாரங்களை வரையறுக்கக்கூடிய பிரிவுகள் அமைந்திருக்கின்றன. அதைக் கொஞ்சம் திருத்தி அமைக்கவேண்டும். முக்கியமாக இதிலே கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள், கோவாபரேடிவ் டிரிபியூனல் சம்பந்தமாக. சாப்டர் 13-ல் இது பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது மிகவும் வரவேற்கக்கூடிய விஷயம் தான். இந்த சாப்டரில் 98-வது பிரிவு அவ்வளவு சரியா என்று பார்க்க வேண்டும். ஏனென்றால் சிவில் கோர்ட்டு அதிகாரம் பூராவும் எடுக்கப்பட்டுவிட்டது. அந்த அதிகாரம் டிரிபியூனலுக்கு வழங்கப்படுகிறது. ரிஜிஸ்டிரார் தீர்ப்பின் பேரில் டிரிப்யூனலுக்கு அப்பீல் செய்து கொள்ளலாம் என்று கூறப்பட்டிருக்கிறது. அந்த டிரிப்யூனலுக்கு 'சப் ஜட்ஜுக்கு' குறையாத அந்தஸ்துள்ள 'ஜுடிஷியல் ஆபீசர்' நியமிக்கப்படுவார் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது மிகவும் நல்லதொரு மாற்றம் தான். இருப்பினும் 98-வது பிரிவில், '**Bar of Jurisdiction of Civil Courts**'

30th March 1961] [Sri T. Sampath]

என்று குறிப்பிடப்பட்டு, 'கம்ப்ளீட்டாக' சிவில் கோர்ட்டுக்கு அதிகாரம் இல்லை என்ற முறையில் அந்தப் பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறது. அது சரி அல்ல என்று எண்ணுகிறேன். அந்தப் பிரிவு மிகவும் 'டிராஸ்டிக்காக' இருக்கிறது என்று நான் எண்ணுகிறேன். சிவில் கோர்ட்டு அதிகாரத்தை முழுவதும் எடுத்துவிடாமல், டிரிப்யூனல் தீர்ப்பிலிருந்து உயர்நீதி மன்றத்திற்கோ அல்லது ஜில்லா கோர்ட்டுக்கோ 'அப்பீல் பவர்' அல்லது 'ரிவிஷன் பவர்' இருப்பதற்கு வழி வகை செய்யப்பட்டால் அது மிகவும் நன்ருக இருக்கும். ஆகவே இதை நன்கு பரிசீலனை செய்து 98-வது பிரிவை மாற்றி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சிவில் கோர்ட்டுக்கு அதிகாரமே இல்லை என்பதை மாற்றி, சில சந்தர்ப்பங்களில் சிவில் கோர்ட்டுக்கும் அதிகாரம் கொடுப்பது தான் சரி என்று எண்ணுகிறேன். சாதாரணமாக மற்ற சட்டங்களிலும் சிவில் கோர்ட்டுக்கு இம்மாதிரி அதிகாரம் கொடுத்திருக்கிருேம். 'ரிவிஷன் பவர்' சில சட்டங்களில் கொடுத்திருக்கிருேம். 'அப்பீல் பவர்' கொடுத்திருக்கிருேம். 'டிரிப்யூனல்' தீர்ப்பின் பேரில், சிவில் கோர்ட்டுக்கு 'அப்பீல்' அல்லது 'ரிவிஷன்' செய்துகொள்ள அதிகாரம் வழங்கப்படவேண்டும் என்றுதான் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, 'பாரோயிங் பவரைப்' பற்றிய பிரிவு நல்ல முறையிலே அமைந்திருக்கிறது. அதிலும் கூட சில விஷயங்களைக் குறிப்பிட நான் விரும்புகிறேன். இம்மாதிரி சொஸைடிகளுக்குப் பண உதவி மாத்திரம் நம்முடைய சர்க்கார் செய்து வந்தது. ஆனல், இப்பொழுது அந்த சொஸைடிகளிலே பங்குகளை ஓரளவு எடுத்துக்கொள்ளக்கூடிய ஏற்பாடுகளை செய்திருக்கிருர்கள். அது கூட 'liability to be limited in respect of certain shares' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதையெல்லாம் நன்கு பரிசிலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சாப்டர் 8-லே ஆடிட் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. ஆடிட்தான் முக்கியமானது. அதை அதிகமாகப் பலப்படுத்தவேண்டும். சொஸைடிகளிலே ஊழல்கள் அதிகமாக இருக்கின்றன. பணங்கள் கையாடப்படுகின்றன. தப்பான வழிகளில் செல்கிருர்கள். அதை மாற்ற வேண்டுமானல் ஆடிட் நல்ல வகையில் அமைந்தால்தான் அம்மாதிரிக் குறைகளை நீக்க முடியும். ஆகவே, இந்த 64-72 பிரிவுகளைப் பலப்படுத்த வேண்டும். ஆடிட்டுகளுக்கு அதிகாரம் அதிகமாகக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். ஆடிட்டிலே தாமதங்கள் இருக்கக்கூடாது. அப்படித் தாமதம் இருப்பதால், குற்றம் செய்தவர்கள் போய், பின்னர் பொறுப்பேற்றவர்களுக்கு ரெஸ்பான்ஸிபிலிடி வருகிறது. ஆகவே, ஆடிட் உடனுக்குடனே செய்யப்படுவது மிக அவசியமாக இருக்கிறது. அதாவது அந்தந்த ஆண்டு முடிந்ததும், ஆடிட் ரிப்போர்ட் உடனுக்குடனே வரும் நிலையை ஏற்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் ஓராண்டில் நடக்கும் ஊழல்கள் உடனடியாக வெளிவரும், சொசைடிகளும் நல்ல முறையிலே பணிபுரிய முடியும். இந்தக் கருத்துக்களை மனதில் கொண்டு இந்த சாப்டரை திருத்தியமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சாப்டர் 14, 'அபன்ஸெஸ் அன்ட் பெனல்டீஸ்', என்ற பிரிவில் சில குற்றங்களுக்கு கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அந்த தண்டனைகளைக் குறைக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டு, என்னுடைய பேச்சை முடிக்கிறேன்.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சபை முன் வந்திருக்கும் கூட்டுறவு மசோதாவை ஆதரித்து சிற்சில விஷயங்களை, பொறுக்குக் கமிட்டிக்குப் போகக் கூடிய சந்தர்ப்பம் இருப்பதால்,பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் கவனிக்க வேண்டி,இந்தக் கூட்டுறவு மசோதா நல்ல முறையிலே அமைந்து இப்பொழுது இருக்கும் குறைகள் நீங்கி, குற்றங்கள் களைந்தெறியப்பட்டு, நல்ல முறையிலே இயங்கவேண்டும் என்பதற்காக, என் கருத்துக்களையும் சொல்ல விரும்புகிறேன். இந்த சொஸைடிகள் விவசாயிகளுக்கும், ஏழை மக்களுக்கும்

ஒரு நல்ல வரப்பிரசாதம் போல் அமைந்திருக்கின்றன. இந்த மாநிலத்திலே விவசாயப் பெருமக்கள், தங்களுடைய விவசாயத்தைப் பெருக்க இதை உபயோகப் படுத்திக் கொண்டு வருகிறார்கள். இந்த கூட்டுறவு மசோதா சீரும் சிறப்புமாக நல்ல முறையிலே நடக்கும் வகையிலே இயற்றப்பட வேண்டுமென்ற கடமையை உணர்ந்து அமைச்சர் அவர்கள், குறைகளை நீக்கி இது நல்ல முறையிலே நடைபெற, முன்னேற்றம் அடைய வழிவகை காண இந்த மசோதாவைக் கொண்டு வந்திருப்பதற்காகப் பாராட்டுகிறேன்.

இன்றைக்கு கூட்டுறவு சொஸைடிகள் நடந்துவரும் முறையிலே சில குற்றம் குறைகள் இருக்கின்றன, தவறுகள் ஏற்படுகின்றன. சிலபேர் பிரசிடெண்டாக இருக்கக் கூடியவர்கள் பல ஆயிரக்கணக்கான ரூபாய்களை மோசடி செய்தாலும் உடனுக்குடன், வரும் பிரசிடெண்டோ, தலைவரோ வசூல் செய்யக்கூடிய முறையிலே இல்லாமல், கவர்ன்மெண்ட் பொறுப்பில் விட்டுவிடப்படுகிறது. யூனியன் தலைவராக இருப்பவர் வசூல் செய்யும் பொறுப்பை மற்றவர்களிடம் விட்டுவிடும் நிலைமை இருக்கக்கூடாது. அப்படியிருப்பதால், பல ஆயிரக்கணக்கான பணங்கள் வசூல் செய்யப்படவில்லை. அதனால் பல சொஸைடிகள் லிக்விடேஷனாகி விடுகிறது. கடன் வாங்குவதற்கும் இல்லாமல் கிராம மக்கள் தொல்லைப் படுகிறார்கள். ஆகவே, அந்தத் தொகையை உடனடியாக வசூல் செய்ய ஏற்பாடுகள் செய்யப் படவேண்டும். சட்டத்தில் இடமில்லாவிட்டாலும், 'ஷேர் கேபிடலை' ஈடு செய்து விட ஏற்பாடு செய்து, அந்த இடத்தில் ஒரு புது சொஸைடியும் அமைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இந்த இரண்டும் செய்யாவிட்டால், அந்த கிராம மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். பணத்தை மோசடி செய்திருந்தால், அதை உடனடியாக வசூல் செய்ய நடவடிக்கை எடுத்து குற்றத்திற்கும் பரிகாரம் காணவேண்டும். பொறுக்குக் கமிட்டியார் இதற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. சம்பத் சொன்னது போல, அடிக்கடி ஆடிட் செய்யப்படவேண்டும். சுமார் 10, 15 வருஷங்களாக 'லிக்விடேஷனு'கியிருந்தாலும், அம்மாதிரி இடங்களில் இன்னும் சொசைடிகள் ஆரம்பிக்கப்படவில்லை. அதற்கான நடவடிக்கைகளை எடுக்க அரசாங்கம் துரிதமாக முன்வரவேண்டும். தாமதம் அதிகமாக இருக்கிறது. ஆடிட் செய்தால் தவறுகள் தெரிந்து உடனடியாக அவற்றை திருத்தியமைக்கும் பரிகாரத்தைக் காணலாம். ஆடிட் செய்ய, உடனுக்குடனே கணக்குகளைப் பரிசீலிக்க ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்.

இதிலே மூன்று முறை தொடர்ச்சியாக இருந்தவர்கள் மீண்டும் இருக்கக் கூடாது என்றிருக்கிறது. அது அவ்வளவு பொருத்தமாக இல்லை. கூட்டுறவுத் துறையிலே நல்ல முறையிலே பணியாற்றியவர்கள், அந்தந்த ஜில்லாவிலே கூட்டுறவு முறை நல்ல முறையிலே இயங்கவேண்டுமானால், அவர்கள் பணியைப் பெற அதை மாற்ற வேண்டும். சிற்சில சொசைடிகளிலே தவறுகள் நடக்கலாம். அப்படிப்பட்டவர்களை நீக்க மட்டும் ஏற்பாடு செய்ய வேண்டுமே ஒழிய, ஓட்டு மொத்தமாக எல்லா அனுபவப்பட்டவர்களையும், மூன்று முறைக்கு மேல் இருக்கக்கூடாது என்று சொல்லுவது, சொசைடியின் வளர்ச்சியை குறைக்கும். ஆகவே இந்த ஷரத்தை பொறுக்குக் கமிட்டி நன்கு பரிசீலித்து அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நான் சொந்த லாபத்திற்காக சொல்லவில்லை. நான் சொசைடியிலே பிரசிடெண்டாக இருக்கவில்லை. இருக்க வேண்டுமென்றும் சொல்லவில்லை. என் கருத்து, கூட்டுறவு சொசைடிகள் நல்ல முறையில் வேலை செய்யவேண்டும். கூட்டுறவு முறை கிராம மக்களுக்கு இன்றியமையாதது. அதன் பலனை மக்கள் முழுவதும் அடைய வேண்டும் என்ற கருத்துடன் தான் சொல்லுகிறேன். ஆகவே, அதை வெற்றிகரமாகச் செய்யக் கூடிய வகையில் பணியாற்றக்கூடியவர்கள் இருக்கவேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறேன். இந்த ஷரத்து அவசியமா என்று பரிசீலிக்க வேண்டும்; என் கருத்து இது அவசியமில்லை என்பது. அவர்கள் நீண்ட நாள் அனுபவத்தின் பேரில் பொது மக்க

30th March 1961] [Sri M. R. Kandaswami Mudaliyar]

ளால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். பொது மக்கள் ஆதரவு இருக்கும் வரை, பொது மக்களிடம் அவர்களுக்குச் செல்வாக்கு இருக்கும் வரையில், சட்டத்தைத் திணித்து அவர்களை வெளியேற்றுவது சரியானதல்ல. இதை குழு சிந்திக்க வேண்டும்.

மேலும், ஒரு சொசைடியில் இருப்பவர் இரண்டு, மூன்று சொசைடிகளில் இருப்பது பற்றியும் யோசிக்க வேண்டும். ஒரு சென்ட்ரல் பாங்கு பிரெஸிடெண்டாக இருப்பவர், ஸ்டேட் பாங்கிலும் இருந்தால், அது நலமாக இருக்கும்; சென்ட்ரல் பாங்கில் இருக்கும் கஷ்ட நஷ்டங்களை, ஸ்டேட் பாங்குக்குச் சொல்லி உதவிகள் பெற மிக அவசியமாகவும், பலனுள்ளதாகவும் இருக்கும். அது பாங்கு வளர்ச்சிக்கு வழிவகை செய்யும். ஆகவே ஒரு இடத்தில் இருப்பவர் இன்னொரு இடத்தில் இருக்கக் கூடாது என்பது அவ்வளவு சரியில்லை. அதை யோசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அப்பீலுக்கு டிரிபியூனல் ஏற்படுத்தி யிருப்பதை வரவேற்கிறேன். கோர்டிலே சட்டத்தை வைத்துக் கொண்டு வாதாடுவது பல இன்னல்களுக்கு இடமளிக்கிறது. ஜனநாயக முறையிலே டிரிபியூனலை அமைத்து, திருத்தியிருப்பதை பொறுக்குக் கமிட்டி ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

இன்னொன்று, 'இந்தக் கூட்டுறவு சொஸைடிகளில் இருக்கக் கூடியவர்கள் மற்றவர்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்வதில்லை. 11 a.m. பெரும்பாலானவர்கள் அங்கத்தினர்களாகச் சேருவதற்கு வாய்ப்பு அளிப்பதில்லை' என்ற புகார் இருந்து கொண்டிருக்கிறது. இனி அதற்கு இடம் இல்லாமல் எல்லோரும் அங்கத்தினராகச் சேருவதற்குரிய வாய்ப்பை இந்த மசோதாவில் ஏற்படுத்தியிருப்பதை வரவேற்கிறேன். யார் வேண்டுமானாலும் அங்கத்தினராகச் சேர்ந்து பணி புரிவதற்கு வாய்ப்பு இருப்பது எல்லோராலும் வரவேற்கத் தக்கது.

இன்னொரு தவறு இருக்கிறது. அதையும் பரிசீலனைக் குழு ஆராய்ச்சி செய்ய வேண்டும். க்ரெடிட் சொசைடிகள் இரண்டு, மூன்று வைத்து அதை விவசாய பாங்காக மாற்றலாம் என்ற ஷரத்து இருக்கிறது. அப்படி மாற்றுகிறபோது ஏற்கனவே அதில் இருக்கக்கூடிய அங்கத்தினர்களுக்கு, 1000 பேர்கள் இருந்தால் ஆயிரம் பேர்களுக்கும் நோட்டீஸ் கையெழுத்து வாங்கிக்கொண்டு சமர்ப்பிக்க வேண்டுமென்று இருக்கிறது. 999 பேர்கள் நோட்டீஸ் வந்தது என்று சொன்னாலும், ஒரு அங்கத்தினர் எனக்கு வரவில்லை என்றால் அந்த நடவடிக்கை செல்லுபடியாகாது என்று சமீபத்தில் ஹைகோர்ட்டே தீர்ப்பளித்திருக்கிறது. ஒருவர் கூட குறையாது ஆயிரம் பேர்களையும் ஒரு கூட்டத்திற்குக் கூட்டுவது என்பது அநுபவ சாத்தியமில்லாதது. பொதுவாக விளம்பரம் செய்யப்படலாம், கூடியவரையில் எல்லோருக்கும் தகவல் கிடைக்கும்படி செய்யலாம். ஆனால் ஒருவருக்குக் கிடைக்கவில்லை என்ற காரணத்திற்காக 999 பேர்களுக்குத் தகவல் கிடைத்தாலும் அக் கூட்டம் செல்லுபடியாகாது என்று இருக்கக் கூடிய நிலைமையை ஆலோசனைக் குழு பரிசீலித்து மாற்றியாக வேண்டும்.

இன்னும் நெசவாளர் கூட்டுறவு சங்கங்களில் சில குறைகள் இருக்கின்றன. சங்கங்களுக்குக் கிடைக்கக்கூடிய லாபத்தை நெசவாளர்களுக்கு போனசாகக் கொடுப்பதில் க்ஷேமநிதி, ரிசர்வ் நிதி, கட்டிட நிதி என்றெல்லாம் எடுத்துவிட்டு பாக்கி 36 சத விகிதம்தான் போனசாகக் கொடுக்கப்படுகிறது. அறுபத்து நான்கு சத வீதம் மற்ற இனத்திற்குப் போய்விடுகிறது. அப்படியின்றி 50 சத விகிதம் 50 சத விகிதம் என்றாவது பிரித்து நெசவாளர்களுக்கு போனசாக 50 சதவிகிதம் இந்த சொஸைடிகள் கொடுக்கவேண்டும் என்பதாக சட்டத்தில் வகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு இந்த சொஸைடிகளில் நம் அரசாங்கம் பங்கு எடுத்துக் கொள்வதை நான் வரவேற்கிறேன். நன்கு அவை நடைபெறுவதற்கு அரசாங்கம் பங்கு எடுத்துக்கொள்வதன் மூலம் கவனிப்பும், கண்

காணிப்பும், நல்ல முறையில் இருக்கும். இது பொது மக்களுக்கும் உதவியாக இருக்கும் என்று தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI P. G. KARUTHIRUMAN : Mr. Deputy Speaker, Sir, I move—

"That the number of Members be increased to 23 and the following Members of the Assembly be added as Members of the Committee :—

1. Sri B. Bhakthavatsalu Naidu.
2. Sri N. S. Ramalingam.
3. Sri T. S. Ramaswami."

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on behalf of the Government I accept the amendment.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா கொஞ்ச நாட்களாக எதிர்பார்க்கப்பட்ட மசோதா. நேற்றுதான் இந்த மசோதா எங்கள் கையில் கிடைத்தது. நூற்றிப்பதினைந்து ஷரத்துக்கள் கொண்ட மசோதாவை ஒரு நாளில் விவாதித்து, பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவது என்கிறபோது சாங்கோபாங்கமாக எல்லா அங்கத்தினர்களும் தங்கள் கருத்தைத் தெரிவித்துக் கொள்ள முடியும் என்று சொல்வதற்கில்லை. ஆனால் ஒரு சில விஷயங்களைச் சுட்டிக்காட்ட அவாவுறுகிறேன்.

இந்த மசோதா அத்தியாவசியமான மசோதா என்பதில் யாதொரு ஐயப்பாடும் கிடையாது. இந்த மசோதாவால் என்ன என்ன சாதக பாதகங்கள் ஏற்படும் என்பதை நம் மாநிலத்தில்தான் நன்றாக உணர்ந்து பார்க்க முடியும். காரணம் அகில இந்திய ரீதியில் கூட்டுறவு இயக்கம் நம் ராஜ்யத்தில்தான் நல்ல முறையில் பரவியுள்ளது. ஆகவே நமக்கு இருக்கக்கூடிய அநுபவங்கள் அடிப்படையில் இதில் பல திருத்தங்கள் கொண்டுவர உத்தேசித்திருப்பது நல்லது. சில ஷரத்துக்களை மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது ஏற்கனவே இருந்த சட்டங்களைக் காட்டிலும் இந்தச் சட்டத்தினால் பல இடுக்கண்கள் வந்துவிடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. உதாரணமாக இன்று 26-வது ஷரத்திலே "பி" வகுப்பிலே "to constitute a smaller body to represent the general body of its members" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஜெனரல் பாடியைப் பார்க்கிலும் ஸ்மாலர் பாடி என்று சொன்னால் உண்மையில் எந்தமுறையில் அமையும் என்று சொல்ல முடியாது. ஸ்மாலர் பாடி, அதைப் பார்க்கிலும் ஜெனரல் பாடி என்றால்—ஒரளவு புரிந்து கொள்ள முடியும். அப்படியின்றி ஸ்மாலர்பாடி என்றால் பொதுமக்களுக்கு அதில் நம்பிக்கை ஏற்படுமா? இது நல்லமுறையில் செயல்படுமா என்பதை சிந்திக்கவேண்டும். இன்றைய தினம் அங்கங்கே கூட்டுறவு சொஸைடியில் இருக்கக்கூடியவர்கள் தனிப்பட்ட முறையிலும் வியாபாரம் செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் தங்களுடைய சொந்த லாபம் பாதிக்காத வகையிலும்தான் கூட்டுறவு சங்கங்கள் வளர்ச்சி அடைவதை விரும்புகிறார்கள். கூட்டுறவு சங்கம் ஏதாவது ஒரு திட்டத்தை மேற்கொள்வது என்றால் அதனால் தங்கள் வியாபாரம் பாதிக்கப்படுமோ என்கிற சந்தேகம் வந்தால் உடனே கூட்டுறவு சங்கம் பாதிக்கப்படுவதைக் கூட லட்சியம் செய்யாது அந்தத் திட்டத்தை மேற்கொள்ளாதபடி செய்கிறார்கள். அதுவும் ஸ்மாலர்பாடி என்று வைத்துவிட்டால் ஒரு சிலர் இப்படி அதற்குள் நுழைந்து விட்டார்கள் என்றால் . . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : டி. யூ. ஸி. எஸ்.-ல் அறுபதினாயிரம் பேர்கள் இருக்கிறார்கள். அவ்வளவு பேர்களும் வேண்டுமா அல்லது ஒரு சிறு கமிட்டி போடலாமா, வேண்டாமா என்பதை யோசித்துப் பார்த்துச் சொன்னால் நன்றாக இருக்கும்.

30th March 1961]

SRI K. SATTANATHA KARAYALAR : டி.யூ.ஸி.எஸ். போன்ற ஓரிரு ஸ்தாபனத்தை மனதில் வைத்து எல்லா ஸ்தாபனங்களுக்கும் இந்த மாதிரியாகச் சட்டம் செய்வது சரியல்ல. டி. யூ. ஸி. எஸ்.–ஐப் பொறுத்த வரையில் கூட அங்கங்கே அந்த அந்தப் பேட்டையில் உள்ள அங்கத்தினர் களைக் கொண்டு ஜெனரல்பாடி என்றுவது வைப்பதுதான் சரியானதாக இருக்கும். எல்லா சொஸைடிகளிலும் ஸ்மாலர் பாடி என்று போட்டு விட்டால் கூட்டுறவு இயக்கத்தில் இருக்கக்கூடிய நம்பிக்கையே குறை ந்துவிடும். எல்லா அங்கத்தினர்களும் சேர்ந்து முடிவு செய்வது, லாப நஷ்டத்தைப் பரிசீலிப்பது, நிர்வாகிகள் தவறுகப் போகும்போது கண் டிப்பது என்பதற்கான வாய்ப்பு இருப்பதுதான் அவ்வியக்கம் மேலும் மேலும் வளர்ச்சி அடைவதற்கு வழி செய்யும். எந்த எந்த இடங்களில் எல்லாம் தன்னலமற்றவர்கள், சுயநலமற்றவர்கள் இருந்து பணியாற்றி வருகிருர்களோ அந்த அந்த இடங்களில் உள்ள சொஸைடிகள்தான் மிகவும் நன்ருக நடைபெற்று வருகின்றன. அத் தகையவர்கள் இல்லாத இடங்களில் குறைபாடுகள் இருக்கத்தான் செய் கின்றன. தங்களுடைய வியாபாரத்திற்குப் பங்கம் வரும் என்ருல் சொஸைடிக்குள் இருப்பவர்களே சொஸைடியின் சேவைகளைத் தடுக்க முயல் கிருர்கள். அதுவும் ஸ்மாலர் பாடி என்ருல் நிச்சயமாக அதில் புகுந்து தடுத்துவிடுவார்கள். ஜெனரல் பாடி என்ருல் அவ்வளவு துணிவு இருக்காது.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர், இந்த விதமாக "ஸ்மாலர் பாடி" இருக்கவே கூடாது என்று சொல்கிருர்களா? அல்லது அங்கத்தினர்கள் விரும்பினுல் வைத்துக் கொள்ளலாமா?

SRI K. SATTANATHA KARAYALAR : இருக்கவே கூடாது என்று தான் நான் வற்புறுத்துகிறேன். அங்கத்தினர்கள் விரும்பினுல் என்று சொன்னுல் கூட்டுறவு இயக்கத்தில் ஆர்வமில்லாத, உற்சாகமில்லாத மக்கள் ஏதோ சேர்ந்து விட்டோமே என்று நினைக்கக்கூடிய இனம் பெரும் பகுதியிருக்கிறது. ஆகவே, அவர்களை வைத்துக் கொண்டு ஸ்மாலர் பாடி இருக்கலாம் என்று அவர்கள் தீர்மானம் நிறைவேற்றி விடுவார்கள். உதாரணத்திற்காக, ஒரு சில நபர்கள் கூட்டுறவு இயக்கத்தில் அக்கறை யுள்ளவர்கள் ஒரு கூட்டத்திற்கு வரவில்லையென்ருல் அன்று எடுக்கப் படும் முடிவு வேருகயிருக்கும். மறு நாளே ஜெனரல் பாடி கூட்டி அந்தக் குறிப்பிட்ட நபர்கள் வந்தால் அவர்கள் சொல்லக் கூடிய கருத் தைத் தழுவி முன் தினம் எடுக்கப்பட்ட முடிவே மாறிவிடும். ஆக, கூட்டுறவு இயக்கத்தில் மாறுபட்ட தீர்மானங்கள் தொடர்ந்து வருவதை நாம் பார்க்கிறேம். ஆக, ஸ்மாலர் பாடி அமைவது சிறந்தது அல்ல இன்றைய கட்டத்தில் அது அவசியமில்லை. அடுத்தப்படியாக, 27-வது வகுப்பில் கவர்ன்மென்ட் பைனன்ஸ் செய்யக்கூடியவைகளில் கமிட்டியில் மூன்றில் ஒரு பாகம் சர்க்கார் நியமனம் செய்யலாம் என்றிருக்கிறது. இது அவசியமில்லை. அப்படியே சர்க்கார் நியமிக்க வேண்டுமென்ருல் சர்க்கார் தரப்பு, ஆளும் கட்சியினர் என்றெல்லாம் பலவிதச் சிக்கல்கள் ஏற் படும். ஆகவே, கூட்டுறவு இயக்கத்தில் நாமினேஷன் என்ற சம்பிரதாயமே வராமல் இருந்தால் கூட்டுறவு இயக்கம் வளர அது வழி கோலுவதாகும். கூட்டுறவு இயக்கத்தில் மேல் இருந்து எந்தவிதமான நிர்ப்பந்தமும் வராதிருக்கும் நிலை இருக்கவேண்டும். ஆகவே, இந்த ஷரத்து அவசிய மில்லை. பின், டிஸ்குலாபிகேஷன்ஸ் பற்றி எனக்கு முன் பேசியவர்கள் குறிப்பிட்டார்கள். ஒரு நபர் மூன்று சொஸைட்டி களில் இருக்கலாமா ? உதாரணமாக க்ரெடிட் செஸைட்டி, மார் கட்டிங் சொஸைட்டி இவைகளை எடுத்துக் கொண்டால் இவை ஒன்றே டொன்று தொடர்பு இருக்கவேண்டிய கூட்டுறவு இயக்கங்கள். ஒரே மனிதர் இங்கும் அங்கும் இருப்பதால் தீமைக்குப் பதிலாக நன்மை தான் ஏற்படும். பம்பாயில் கூட இப்படி ஒரு சட்டம் இயற்றிய பின்னர் புனர் பரிசீலனை செய்து அதை பின்வலித்து விட்டார்கள் என்று தோன்றுகிறது. ஆகவே, இதுபோன்ற வகுப்புகள் தேவையில்லை. பொறுக்குக் கமிட்டி நல்ல முறையில், பல மாவட்டங்களிலுள்ள கூட்டுறவு இயக்கங்களிலுள்ள வல்லுனர்களைக் கலந்தாலோசித்து அவர்களின் அபிப் பிராயத்தையும் பெறவேண்டும்.

பர்ஸ்ட் சார்ஜ், கம்பனி லாவில் இருப்பது போல் டிவிடென்ட்க்கு இருக்க வேண்டும். கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்தால் க்ரெடிட் பர்பஸ்க்கு மட்டும் வருகிறார்கள். கூட்டுறவு சொஸைட்டியில் பணம் போட்டால் லாபமே கிடையாது போட்ட ஷெயரை திரும்பி வாங்க முடியாது என்ற மனப்பான்மைதான் பலவிடங்களிலும் இருக்கிறது. லாபம் காட்ட வேண்டும். வர்த்தகத் துறையில் லாபம் கிடைக்கும்போது கூட்டுறவு சொஸைட்டியில் மட்டும் லாபம் இல்லாமலிருந்தால் தர்மத்திற்காக நடத்தும் முறையில் இருந்தால் ஷெயர்ஸே வராது. அந்த முறையில் நிதி ஒதுக்குவது சரியல்ல. பின், அப்பீல் பொறுத்த வரை, சம்மரி டிஸ்போஸல் தேவை. ஜுடிஷியல் ஆபீஸர் மூலம் கொடுத்தால் காலதாமதம் ஏற்படும். கூட்டுறவு இயக்கத்தின் நன்மையைக் கருதி கூட்டுறவு இலாகாவில் உள்ளவர்கள் பொறுப்பானவர்கள் இதில் இருந்தால் போதும், அவர்களே இதை நல்லமுறையில் பரிபாலனம் செய்து கொள்ளக்கூடும். ஆகவே இதற்கு அவசியமிருக்கிறதா என்று பரிசீலிக்க வேண்டும். கடைசியாக, கூட்டுறவு பார்மிங்க்ஸ் பொறுத்தவரை ஒரு வார்த்தை. கூட்டுறவுப் பண்ணையில் சேர்ந்து விட்டால் அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் கூட்டுறவு இயக்கத்தில் ஐந்து ஆண்டுகள் இருக்கவேண்டுமென்று நிர்ப்பந்தம் வைப்பது இதில் அங்கத்தினர்கள் சேருவதை உற்சாகப் படுத்துவதாகாது. கூட்டுறவு இயக்கத்தில் சேர பலர் அஞ்சக்கூடும். இதில் சேர்ந்தால் நம் சொத்துக்கள் எல்லாம் போய் விடுமோ, அப்படிச் சேர்ந்து விட்டால் பின்னால் நம்மால் விலக முடியாதே என்ற பயம் ஏற்படக்கூடும். ஆகவே, எப்பொழுது வேண்டுமானாலும் பிரிந்து போக உரிமையிருக்க வேண்டும். அப்படி அமைத்தால் பண்ணைகள் சரிவர செயல்படாமல் போய் விடும் என்று சொல்லக் கூடும். அப்படி ஒரு வேளை நஷ்டம் ஏற்பட்டாலும், சர்க்கார் பங்கெடுத்துக்கொண்ட பார்ம்ஸ் ஏதாவது நல்லமுறையில் செயல்பட வில்லை என்றால் சர்க்கார் அதற்காகத் தனி உதவி செய்ய முன்வரவேண்டும். எப்படி நல்லமுறையில் செயல்படுத்துவது என்பதைக் காட்டி சர்க்கார் மக்களை உற்சாகப்படுத்தி இந்த இயக்கத்தில் சேர்க்க வேண்டும். ஐந்து ஆண்டுகள் இருந்துதான் ஆக வேண்டும் என்று வைத்தால் பலர் அஞ்சக்கூடும், அதில் சேருவதற்கு. ஆகவே, இதுபோன்றவைகளை நல்ல முறையில் சாங்கோபாங்கமாகப் பரிசிலனை செய்து பொறுக்குக் கமிட்டி பல மாவட்டங்களிலும் நடக்கக்கூடிய கூட்டுறவு சொஸைட்டிகளை நேரில் பார்வையிட்டு வேண்டிய திருத்தங்கள் செய்ய வேண்டும். குறைந்த காலமிருக்கிறார்கள், நீண்ட காலமிருக்கிறார்கள் என்ற கண்ணோட்டத்தோடு மட்டும் பார்க்கக் கூடாது. ஒரு சிலர் நிரந்தரமாகக் கூட்டுறவு சொஸைட்டிகளில் இருக்கிறார்கள் என்ற ஒரு குறையிருக்கிறது. பொது மக்கள் விழிப்படையும் வரையில், அவர்கள் கூட்டுறவு இயக்கத்தில் பங்கு கொள்ள முன்வரும் காலம் வரை இது இருந்துகொண்டுதான் இருக்கும். ஒரு சில பிற்போக்குவாதிகள், அல்லது சந்தர்ப்பவாதிகள் கூட்டுறவு இயக்கத்தை தன்னலத்திற்காகப் பயன்படுத்திக்கொள்கிறவர்கள் கூட்டுறவு சொஸைட்டிகளில் புகுந்து விடுகிறார்கள். அவர்களை வெளியேற்ற இது ஒரு திட்டம் என்று சொல்லலாம். அவர்கள் ஒரு வேளை விலகிக் கொண்டாலும், அவர்கள் "ஸ்டூஜெஸ்"—கையாட்களை வைத்து விடுவார்கள் அதில். ஆகவே, பொதுமக்களிடையே விழிப்பு ஏற்பட்டு அவர்கள் கூட்டுறவு இயக்கத்தில் அக்கறை கொள்ளும்போதுதான் இந்த நிலையைத் தவிர்க்க முடியுமே தவிர இப்படி ஒரு சட்டம் செய்வதால் நல்லமுறையில் செயல்பட்டு வருகிறவர்கள் கூட கூட்டுறவு இயக்கத்தில் இருந்து விலகும் நிலைதான் ஏற்படும். ஆகவே, இவைகளையெல்லாம் நல்ல முறையில் பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது பல காலமாக அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து இப்பொழுதுதான் சட்டமன்றத்தின் முன்னால் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்த மசோதா நேற்றுதான் பப்ளிஷ் செய்யப்பட்டது. இவ்வளவு க்ளாஸ்களையும் பற்றி, இதன் முக்கிய கொள்கைகள் பற்றி இவ்வளவு சீக்கிரத்தில் சொல்ல முடியுமா என்று பார்த்தால்

முடியாத காரியம்தான், அது. இருந்தபோதிலும் இதிலுள்ள சில குறைபாடுகளை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நான் செலக்ட் கமிட்டியில் இருப்பதால் அங்கு இவைகளைப் பற்றி கவனிக்கலாம் என்ற காரணத்தையொட்டியும், சட்டமன்றத்தின் முன்னால் இதைப்பற்றிச் சொன்னால் சட்டமன்ற உறுப்பினர்களின் அபிப்பிராயங்களையும் தெரிந்து கொள்ளலாம் என்ற காரணத்தையொட்டியும் சில பிரிவுகள் பற்றி மட்டும் இப்பொழுது இங்கு சொல்ல ஆசைப்படுகிறேன்.

குறிப்பாக, ஆடிட் பற்றி சொல்லப் பட்டிருக்கிறது. இந்த மன்றத்தின் முன்னால் பலமுறை எடுத்துச் சொல்லி யிருக்கிறோம், இந்த டிப்பார்ட்மெண்ட் ஆடிட்டே கூடாதென்று. அதைக் குறித்து இங்கு பார்த்தால், இன்னும் டிப்பார்ட்மெண்ட் ஆடிட்தான் மேற்கொண்டும் நடைபெறும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கிறபோது, டி.ஆர். அவர்களுக்கு அதிகப்படியான வேலை யிருக்கிறது. மற்ற சொசைட்டிகள் வேலைகளைக் கண்காணிப்பதோடு கூட ஆடிட் செய்வதற்கும் அவர்களுக்கு நேரமில்லை. மேலும் அவர்கள், கையில் ஆடிட்டைக் கொடுத்தால், டிப்பார்ட்மெண்ட் ஆடிட்டாகயிருந்தால் ஊழல்கள் ஏற்படுகின்றன என்ற கருத்தில் ஆடிட் டிப்பார்ட்மெண்ட் என்று ஒரு தனி டிப்பார்ட்மெண்ட் நிறுவவேண்டுமென்று இதற்கு முன்னாலேயே பல கோரிக்கைகள் உள்ளன. ஆகவே, இது செலக்ட் கமிட்டிக்குச் செல்லும்போது கனம் அமைச்சர் அவர்கள் இதை நல்ல முறையில் பரிசீலனை செய்வார்கள் என்று நினைக்கிறேன். அதேபோன்று புதிய உறுப்பினர்களை சொசைட்டிகளில் சேர்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டால் மூன்றில் இரண்டு பங்கு வாக்காளர்கள் வாக்களித்தால்தான் அந்த சொசைட்டியில் உறுப்பினராகச் சேர முடியும் என்றிருக்கிறது. அப்படி அவர்கள் வாக்களிக்கவில்லையென்றாலும் சேர்ப்பது பற்றிய "பைனல் டிஷன்" டி.ஆர்.-க்கு விடவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மூன்றில் இரண்டு பாகம் என்பதைக் குறைக்க வேண்டும்.

பின்னர், மிஸ்அப்ரோப்ரியேஷன். அப்படி மிஸ்அப்ரோப்ரியேஷன் செய்யும் மெம்பரை மூன்றில் இரண்டு பங்கு வாக்களித்து நீக்கிவிடலாம்என்றிருக்கிறது. அப்படி 2/3 வாக்களிக்கவில்லையென்றால் மிஸ்அப்ரோப்ரியேஷன் செய்தவர்கள்கூட அச் சொசைட்டியில் தொடர்ந்திருக்கலாம் என்று காணப்படுகிறது. அப்படி மிஸ்அப்ரோப்ரியேஷன் செய்தவர்கள்கூட ஆள் பலத்தை வைத்துக் கொண்டு சொசைட்டியில் மேலும் நீடித்துக் கொண்டே போகலாம் என்ற கொள்கைதான் அதில் தென்படுகிறது. பின், ஜாயின்ட் பார்மிங் சொசைட்டிக்கு மட்டும் நிலம் ஆர்ஜிதம் செய்வதற்காக வேண்டி சர்க்கார் ஒரு பிரிவை இந்த மசோதாவில் தந்திருக்கிறார்கள். அதே சமயத்தில் வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணை அமைக்கும்போது நிலச் சொந்தக்காரர்கள் அதற்கு ஒத்துக்கொள்ள முடியாதென்று சொல்கிறார்கள். இப்பொழுதுள்ள விதிப்படி பார்த்தால் நிலச் சொந்தக்காரர்கள் ஒத்துக் கொண்டால்தான் வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணையை உண்டாக்க முடியும். அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லையென்றால் வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணையை உண்டாக்க முடியாது. அதற்கு ஏதாவது வழிவகை செய்திருக்கிறார்களா என்றால் அப்படி வழிவகைகள் செய்யப்பட்டிருப்பதாக இந்த மசோதாவில் ஒன்றும் காணவில்லை. இந்த வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணை மேலும் ஏற்படாமல் இருப்பதற்கான வழிவகைகள்தான் காணப்படுகிறதே தவிர வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணை உண்டாக்குவதற்குள்ள ஒரு பிரிவு இதில் சேர்க்கப்பட வேண்டும். நிலச் சொந்தக்காரர்கள் தங்கள் சம்மதத்தை தெரிவித்தாலும் தெரிவிக்காவிட்டாலும் சர்க்கார் அதை எடுத்து வார சாகுபடியாளர் கூட்டுறவுப் பண்ணை ஏற்படுத்தலாம் என்றதொரு பிரிவையும் இந்த மசோதாவில் சேர்க்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே போல் ஒரு சொசைட்டி மெம்பர் பேரில் ஏதாவது தவறுகள் இருந்தால், அந்த சொசைட்டியில் இருக்கும் மூன்றில் இரண்டு பேர்கள் வாக்களித்துவிட்டால் அதிலிருந்து அவரை விலக்கிவிடலாம் என்று ஒரு பிரிவு இருக்கிறது. இந்த முறையில் பார்க்கும்போது மூன்றில் இரண்டு பங்கு

பேர்கள் வாக்களித்துவிட்டால் விலக்கி விடலாம் என்று சொல்லி இருப்பது மட்டும் அல்ல, இதில் ரெஜிஸ்டிராரின் அதிகாரம் என்ன என்பதைப் பற்றி காணப்படவில்லை. கூட்டுறவு பார்மிங்கைப் பொறுத்தவரையில், மெஜாரிடியினுடைய அபிப்பிராயப்படி மெம்பர்களை சேர்க்க முடியாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதோடு இதில் டீ.ஆர்.-க்கும் அதிகாரம் தரப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் கூட்டுறவுப் பண்ணைக்கு எந்த அதிகாரமும் தரப்படவில்லை. இதையெல்லாம் பரிசீலனைக் கமிட்டியில் நன்ருக ஆராயலாம் என்ற நம்பிக்கையுடன் என் வார்த்தைகளை இதோடு முடித்துக் கொள்கிறேன்.

* SRI S. RAMAKRISHNA THEVAR : கனம் தலைவர் அவர்களே, இந்தக் கூட்டுறவு மசோதாவை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். கூட்டுறவு முறையினுல்தான் இந்த தேசம் நல்ல முறையில் இயங்குகின்றது என்று எல்லோரும் கருதுகின்ற நேரத்தில் நமது நண்பர்களில் ஒரு சிலர் கூட்டுறவு இயக்கத்தில் எங்குமே ஊழல்கள் இருக்கின்றன என்று சொல்வது அர்த்தமில்லாமல் இருக்கிறது. ஊழல் என்ற வார்த்தையை எப்போதும் சிலர் உபயோகித்து வருகிருர்கள். ஊழல் என்பது தங்களுடைய சிரசில் இருக்கின்றது என்று சொல்லுகிருர்கள். ஊழ் மூக்கு, ஊழ் காது என்றெல்லாம் சொல்வதுண்டு. நமது மாகாணத்தைப் பொறுத்தவரை இந்த இயக்கத்தை நடத்துவதற்கு பல நிர்வாகஸ்தர்கள் இருக்கிருர்கள்.

(Sri K. Sattanatha Karayalar in the Chair.)

அவர்கள் இந்த இயக்கத்தை நல்ல முறையில் நடத்திக் கொண்டு வருகிருர்கள். இன்று ஏழை பங்காளனுக இருக்கக்கூடிய நமது முதலமைச்சர் அவர்கள் இந்தக் கூட்டுறவு முறையினுல்தான் இந்த நாட்டிலுள்ள குடி மக்கள் முன்னுக்கு வர முடியும் என்கின்ற காரணத்தை அறிந்து அதற்குத் தகுந்த முறையில் எங்களைப் போன்ற பிற்பட்ட மக்கள் வாழும் இடங்களில் அதிகமாகக் கூட்டுறவு இயக்கங்களை அமைத்து உதவி செய்து கொடுத்துக் கொண்டிருக்கிருர்கள். அவைகள் எல்லாம் நல்ல முறையில் வளர்ந்து கொண்டிருக்கின்றன. உதாரணமாக திருவாடானை தாலுகாவை எடுத்துக் கொண்டால் முன்னுல் 20 சொசைட்டிகள் இருந்தன. முன்பு வேருெரு தாலூகாவோடு இணைந்து இருந்தன. குறுகிய நாட்களுக்குள் இப்போது எங்கள் தாலூக்கா மட்டும் பிரிந்து 135 சொசைட்டிகள் இயங்கி வருகின்றன. மேலும் நாலைந்து க்ரெடிட் யூனியன்கள் இயங்கி வருகின்றன. இவைகள் எல்லாம் நல்ல முறையில் நடந்து வருகின்றன. இவைகளில் பல திருத்தங்கள் செய்யவேண்டும் என்பதைப்பற்றிச் சொன்னுர்கள். இது மிகவும் அவசியம்தான். கூட்டுறவு முறையினுல் என்ன பலன் எல்லாம் கிடைத்திருக்கிறது என்பதைப்பற்றி சிந்தனை செய்ய வேண்டும். முக்கியமாக ஏழை விவசாயிகளுக்கு என்ன நன்மைகளெல்லாம் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கிடைத்திருக்கின்றன என்பதை நாம் கண்கூடாகக் பார்த்துக் கொண்டிருக்கிருேம். இப்போது மாநில உத்தியோகஸ்தர்கள் எல்லாம் நல்லமுறையில் மக்களோடு நெருங்கிப் பழகி செயல்படுவதின் காரணமாக, அதைப் பயன்படுத்திக்கொண்டு, மக்கள் பயன் பெற்று வருகிருர்கள். ஒரு சில இடங்களில் தவறு இருக்கிறது என்று சொன்னுல் மாநிலம் முழுவதுமே தவருகத்தான் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை. சில நண்பர்கள் சொன்னுர்கள். ஊழல்கள் நடந்து கொண்டிருப்பதை பல இடங்களில் பல தடவைகளில் நான் பார்த்திருக்கிறேன் என்று சொன்னுர்கள். அப்படியானுல் இவ்விதம் சொல்லக்கூடியவர்கள் அந்த இடத்திற்கு ஏன்சென்றிருந்தார்கள் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்நிய நாடுகள் எல்லாம் நம்முடைய முறைகளை பார்த்து நல்ல முறைகள் என்று சொல்லிக்கொண்டிருக்கின்றன. நம்முடைய நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனுக்கும் இன்றைக்கு வாழ வழி செய்துகொடுத்திருக்கிறது இந்தக் கூட்டுறவு இயக்கம். ஏழைகளுக்குத்தான் இதனுடைய நன்மை நன்ருகத் தெரியும். பசிக்கிறவனுக்குத்தான் புசிப்பதன் அருமை தெரியும். ஏழை மக்கள் இந்தக் கூட்டுறவு இயக்கத்தை நல்ல முறையில் அனுபவித்து வருகிருர்கள் என்பது ஆங்காங்கு அனுப

30th March 1961] [Sri S. Ramakrishna Thevar]

வித்துக் கொண்டிருப்பவர்களுக்குத் தெரியும். மேலெழுந்தவாரியாக குற்றங் குறைகளை கூறிக் கொண்டிருப்பவர்களுக்கு எப்போதும் குறைகள்தான் தெரியும். நல்ல காரியங்கள் ஒன்றுமே தெரியாது. அதே போன்று எங்கள் பகுதியை எடுத்துக் கொண்டால், கூட்டுறவு முறையினால் அங்கே பல காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. பலவிதமான கடன்கள் வழங்கப்படுகின்றன. கடன் தொல்லையில் சிக்கிக் கொண்டு தவித்தவர்கள் எல்லாம் இப்போது நல்ல முறையில் நிவாரணம் பெற்றிருக்கிறார்கள். என்னுடைய அனுபவத்தில் கூட்டுறவு இயக்கத்தில் பல இடங்களிலும் பல ஸ்தாபனங்களாக இருப்பதைக் காட்டிலும், ஒன்றாக இருப்பது நல்லது. தாலூகா யூனியனை எடுத்துக் கொண்டால், தாலூகா பூராவுக்கும் அதிகாரம் ஒரே ஆளின் கையில் இருப்பதால், பல இடஞ்சல்கள் ஏற்படுகின்றன. ஆகவே இதை பிளாக் வாரியாக பிரித்துக் கொண்டால் நன்றாக இருக்கும். கூட்டுறவு க்ரெடிட் யூனியனை எடுத்துக் கொண்டால், இரண்டு மூன்று சொசைட்டிகள் சேர்ந்து இணைந்திருக்கிறது. இதன் காரணமாக சில விருப்பு வெறுப்புகள் ஏற்பட்டு சில சொசைட்டிகள் சரியான முறையில் இயங்கவில்லை. ஆகவே தனியாக சொசைட்டிகள் இயங்குவதற்கு வாய்ப்பு இருக்குமானால் நல்ல முறையில் எல்லோரும் பலன் பெற முடியும். ஆகவே இதைப் பிரித்துக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நில அடமான பாங்குகள் சம்பந்தமாக இப்போது ஒன்றிரண்டு பாங்குகள் சேர்ந்து இருக்கின்றன. அதையும் தனியாக தாலூகா வாரியாகப் பிரித்துக் கொடுத்தால் நன்றாக இருக்கும். அதன் மூலமாக ஏழை மக்கள், விவசாய மக்கள் முன்னேற முடியும் என்பதை தெரிவித்துக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY: சட்டமன்ற தற்காலிகத் தலைவர் அவர்களே, கூட்டுறவு சம்பந்தமாக வந்துள்ள இந்தக் மசோதாவை நான் வரவேற்க கடமைப்பட்டிருக்கிறேன். காரணம் இந்த கூட்டுறவு மசோதாவானது நல்ல முறையில் அமைக்கப்பட வேண்டும். கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் செயல்பட வேண்டும் என்று கருதுகிறவர்களில், நானும் ஒருவன் என்ற காரணத்தினால் இதை நான் வரவேற்கிறேன். நான் எஸ்டிமேட் கமிட்டியில் அங்கத்தினராகப் பணி புரிந்திருக்கிறேன். அந்தக் கமிட்டி கூட்டுறவு இயக்கத்தைப்பற்றி பரிசீலனை செய்த நேரத்தில், பல ஸ்தாபனங்களிலும் நேரடியாகச் சென்று, அங்கே நடக்கக்கூடிய காரியங்களை எல்லாம் நேரிடையாகப் பார்த்து, அங்கே ஏற்படக்கூடிய தவறுகள், எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்து பல சிபாரிசுகளைச் செய்திருக்கிறது. இந்த முறையில் 1958–59-ல் எஸ்டிமேட் கமிட்டி பல அரிய சிபாரிசுகளை செய்திருக்கிறது. அந்த சிபாரிசுகளை எல்லாம் அமல் நடத்த சர்க்கார் முன் வரவேண்டும். இந்த சிபாரிசுகளை செய்தவர் அன்றைய தினம் இந்தக் கமிட்டியின் தலைவராக இருந்த திரு. சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள். அவர்களுக்கு கூட்டுறவு இயக்கத்தில் நல்ல அனுபவம் உண்டு, எத்தனையோ கூட்டுறவு இயக்கங்களில் பணியாற்றி இருக்கிறார்கள். கூட்டுறவு இயக்கத்தில் நல்ல அனுபவமும் பழக்கமும் உள்ளவர் என்ற காரணத்தினால் இதிலுள்ள நல்ல அம்சங்களைப் பற்றியும், இதில் ஏற்படுகின்ற கஷ்ட நஷ்டங்களைப் பற்றியும் நேரடியாக உணர்ந்து, இது சம்பந்தமான அதிகாரிகளையும் நிர்வாகஸ்தர்களையும் கலந்து ஆலோசித்து பல நல்ல கருத்துக்கள் அடங்கிய சிபாரிசுகளை அரசாங்கத்திற்குக் கொடுத்திருக்கிறார்கள். அந்தச் சிபாரிசுகளில் பெரும் பகுதியை இந்தச் சட்டத்தை நிறைவேற்றும்போது அமுலாக்குகிற நிலைமையிலே இந்தப் பொறுக்குக் கமிட்டி செய்யும் என்று எதிர் பார்க்கிறேன். நானும் அந்த பொறுக்குக் கமிட்டியில் இருக்கிற காரணத்தினால் இந்தச் சட்டத்தை முழுக்க முழுக்க இப்போது ஆராய்ந்து பேசுவதற்குப் போதுமான நேரம் இல்லாத காரணத்தினாலும், பரவலாக இன்றையதினம் கனம் அமைச்சர் அவர்கள் பேசிய கருத்தைத்தான் நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். 11-30 a.m.

கனம் அமைச்சர் அவர்கள் முன்னுரையாகப் பேசுகிறபோது சில விவரங்களைச் சொன்னார்கள். இந்தச் சட்டம் வருவதன் நோக்கம் என்று அதன் ஆப்ஜெக்ட்ஸ் அண்டு ரீஸன்ஸ் என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருப்பதைப்

[Sri A. Govindasamy] [30th March 1961

பார்க்கும்போதும், கனம் அமைச்சருடைய கருத்து பிரதிபலித்த நேரத்திலும் ஒரு சந்தேகம் எனக்கு வந்தது. பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பப்பட்டிருக்கும்போது இப்போது இருப்பது மாதிரியே நிறைவேற்றவேண்டும் என்பது அர்த்தம் இல்லை. செலெக்ட் கமிட்டிக்கு வருகிறபோது அதில் உள்ள உறுப்பினர்கள் கருத்துக்களைச் சொல்லும்போது, அவர்கள் சொல்லுவதற்குத் தகுந்தாற்போல மாற்றி அமைக்கப்படும் என்று சொன்னார்கள். நல்ல கருத்துக்களைச் சொல்லும்போது மாற்றி அமைப்பதில் ஆட்சேபணை ஒன்றும் இல்லை. இந்தச் சட்டம் வருவதில் ஆளும் கட்சியில் இருக்கிறவர்கள், கூட்டுறவு ஸ்தாபனங்களில் பங்கு கொண்டிருப்பவர்கள் பரவலாக எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். இதை கனம் அமைச்சர் அவர்கள் நன்கு உணர்வார்கள். இந்த ஸ்தாபனத்தில் இருந்து கொண்டிருப்பவர்கள் எல்லோருமே ஊழல் செய்கிறார்கள் என்று சொல்ல முடியாத நிலைமை இருந்தாலும், பரவலாகத் தவறுகள் நடக்கின்றன என்பது எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட்ட விஷயம். அடிக்கடி இந்த மான்யத்தின் மீது சட்ட மன்றத்தில் பேசும்போதும், கேள்வி நேரத்திலும் கனம் அமைச்சர் அவர்கள் சொல்லிவந்தார்கள், விரிவான சட்டத்தைக் கொண்டுவர இருக்கிறோம், அந்த நேரத்தில் நம் குறைகளை நிவர்த்திக்கும் அளவுக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவைகளைச் செய்து கொள்ளலாம் என்று சொன்னார்கள். இப்போது மூன்று முறைகளுக்கு மேல் இருந்தவர்கள் இருக்க வேண்டியதில்லை. ஒரே சமயத்தில் 1, 2, 3 ஸ்தாபனங்களுக்கு மேல் அங்கம் வகிக்க வேண்டியதில்லை என்று சொல்லும்போது, ஏற்கெனவே பல சொசைட்டிகளில் அங்கம் வகிக்கிறவர்கள் எங்கே தங்கள் பதவிக்கு ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்று பயந்து ஊழல் நடக்கும் இடத்திற்கு ஏன் போனார்கள் என்று சொல்லுகிறார்கள். இவைகளெல்லாம் பொது மக்களுடைய ஸ்தாபனங்கள். நிர்வாகம் ஒரு குறிப்பிட்டவர்கள் கையில் இருந்தாலும் ஒழுங்கான முறையில் நடக்கிறதா என்று பொது மக்கள் கண்காணிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். கூட்டுறவு இயக்கத்தில் இருக்கிறவர்கள் தவறு செய்து கொண்டு இருப்பார்கள், மற்றவர்கள் கவனிக்கக் கூடாது, அந்தப் பக்கம் வரக் கூடாது என்று சொல்லுவது சரியல்ல. ஸ்தாபனங்கள் சரியாக இயங்கினால் இதைக் கண்காணிக்க அதிகாரிகளே தேவையில்லை. ஒழுங்கான முறையில் நடக்காத காரணத்தினால்தான் அதிகாரிகளைப் போட்டு கவனிக்க வேண்டியிருக்கிறது. அதிகாரிகளையும் மீறி தவறுகள் நடப்பதைப் பார்க்கிறோம். நான் எடுத்துக்காட்டாக இரண்டொரு விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். கடலூரிலே வீடு கட்டும் சொசைட்டியில் பல ஆயிரக் கணக்கான ரூபாய் மோசம் போனது அரசாங்கத்திற்கு தெரியும். அதே போன்று கடலூரில் இருக்கிற விற்பனை சங்கத்தில் ஏற்பட்ட ஊழலும் அரசாங்கத்திற்குத் தெரியும். அதேபோல சிதம்பரத்தில் ஏற்பட்ட ஊழலும் அரசாங்கத்திற்குத் தெரியும். எங்கள் மாவட்டத்தில் நடந்த இரண்டொன்றைச் சொன்னேனே தவிர இன்னும் சொல்லவேண்டுமானால் பெரிய லிஸ்டே கொடுக்கலாம். அதிகாரிகள், திறமையாக கண்காணித்திருந்தபோதிலும் இந்த மாதிரி தவறுகள் ஏற்பட்டிருக்கின்றன. சர்க்கார் நடத்துகிற பஸ் டிரான்ஸ்போர்ட் இருக்கிறதே அங்கே வேலை செய்யக்கூடிய தொழிலாளர்கள் கிட்டத்தட்ட 38,000 ரூபாய் வீடு கட்டும் திட்டத்திற்காக கூட்டுறவு ஸ்தாபனத்தில் கொடுத்திருந்தார்கள். பணம் எங்கே போனது என்று தெரியவில்லை. அது சம்பந்தமாக இங்கே கேள்வி கேட்ட நேரத்தில், அதை நிர்வாகம் செய்தவர்கள் இப்போது இல்லை என்று பதில் தருகிறார்களே தவிர கண்டுபிடித்து என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்று தெரியவில்லை. மேலும் க்ரெடிட் சொசைட்டியில் 45,000 ரூபாய் போன இடம் தெரியவில்லை. கேட்டால் ஆடிட் ஆகவில்லை என்று தகவல் கொடுக்கப்படுகிறது. ஆடிட் ஆக எவ்வளவு காலம் பிடிக்கும், எப்போது விவரம் சொல்லுவோம் என்று சொல்லாத நிலைமை இருக்கிறது. இதையெல்லாம் பார்க்கும்போது ஊழல் பரவலாக இருக்கிறது. திறமையானவர்களுக்கு இடம் இல்லாமல் போய் விடுமோ என்று அச்சம் தெரிவிக்கப்பட்டது. சேவா உணர்ச்சியோடு பணிபுரிபவர்களைப்பற்றி குறை கூறவில்லை. அப்படிப்பட்டவர்கள் சேவை நாட்டுக்குத் தேவைதான். இந்த ஷரத்து வந்ததன் காரணம் அனுபவம் உள்ளவர்கள் தங்கள் பதவிகளைத் தவறாகப் பயன்

படுத்துகிறார்கள் என்று குறிப்பிடப்பட்டதே தவிர தவறு செய்தவர்களுக்குக் கோபம் வரவேண்டுமே தவிர தவறு செய்யாதவர்கள் ஆத்திரப்படும்போது உண்மையிலேயே அவர்களும் தவறுகளுக்கு காரணமாக இருப்பார்களோ என்று சந்தேகம் ஏற்படுகிறது. தவறு செய்யாதவர்கள் வருத்தம் தெரிவிக்கவேண்டியதில்லை. வேறு ஆட்களைப் போடும்போது அவர்களுக்கு டிரைனிங் கொடுக்க வசதியாக இருக்கும். இந்தக் கருத்தைச் சொல்லும்போது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் திரு. சஞ்சீவ ரெட்டி அவர்கள் சொன்ன கருத்தை இது பிரதிபலிக்கிறது. பத்து வருஷங்களுக்கு மேல் பதவியில் இருக்கக்கூடாது என்று மந்திரியைப்பற்றிச் சொன்னார்கள். கூட்டுறவு இயக்கத்தில் முதல் அடிப்படையாக எடுத்துக்கொள்ளப்படுகிறது. தொடர்ந்து ஒருவர் மந்திரியாக இருக்கலாம், தொடர்ந்து ஒருவர் சட்ட சபை அங்கத்தினராக இருக்கலாம், கூட்டுறவு சொசைட்டியில் இருப்பதற்கு மட்டும் ஆபத்து வந்து விட்டதே என்று கேட்டால் கூட்டுறவு சொசைட்டியில் ஊழல் காரணமாகத்தான், தவறுகள் காரணமாகத்தான் இது ஏற்பட்டிருக்கிறது. இதில் கனம் அங்கத்தினர் மாரியப்பன் அவர்களுக்கு கோபம் வரக் காரணம் என்ன என்று தெரியவில்லை. (குறுக்கீடு). மாரியப்பன் அவர்கள் கூட்டுறவு சொசைட்டியை ஒழுங்காக நிர்வகித்தால் யாரும் குறை சொல்ல மாட்டார்கள். மாரியப்பன் அவர்களுக்குக் கோபம் வருவது என்ன காரணத்தினால் என்று தெரியவில்லை. அந்த முறையிலே இன்றைய தினம் 28 வருஷ காலமாக இப்போது இருக்கும் சட்டம் அமுலில் இருந்து வருகிறது. அதிலே புதிய மாற்றங்கள் எதிர்காலத்தில் வர இருக்கிறது. கூட்டுறவு முறையில் விவசாயப் பண்ணை அமைக்க நேரிடுகிறபோது எஸ்டிமேட்ஸ் கமிட்டி முதல் சிபார்சாக ஒன்றைச் சொல்லியிருக்கிறது. அதற்கென்று தனி ரிஜிஸ்டிராரைப் போடுகிறபோது, விவசாயத்தில் அனுபவம் உள்ளவர்களாகப் பார்த்துப் போட வேண்டும். கூட்டுறவு இயக்கத்தில் மட்டும் அனுபவம் இருந்தால் போதாது. விவசாயத்தில் அனுபவம் இருந்தால்தான் கூட்டுப் பண்ணை நன்றாக நடக்கும். உற்பத்தி பெருகுவதற்கு விவசாயத்தில் அனுபவம் வேண்டும். கூட்டுறவு சட்ட திட்டப்படி நடக்க கூட்டுறவு அனுபவமும் இருக்கவேண்டும். ஏனென்றால் அந்த சட்ட திட்டங்களைப் பார்த்து செய்யவேண்டியவர்களாக இருக்கிறார்கள். மற்ற பல விஷயங்களைப் பொறுத்தமட்டில் பொறுக்கு குழுவுக்கு வரும்போது என்னுடைய கருத்தை ஒவ்வொரு ஷரத்தையும் படித்துவிட்டுச் சொல்லலாம் என்ற காரணத்தினால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். ஆனால் இதிலே யாரோ எதிர்ப்பார்கள், எதிர்க்கின்றபோது விட்டு விடவேண்டியிருக்கும் என்ற அச்சத்தில் இருக்கவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். எதிர்க் கட்சியிலுள்ள அத்தனை பேர்களும் ஆதரவு தருவார்கள். ஆளும் கட்சியிலிருந்துதான் வரக்கூடிய எதிர்ப்புகள் வரும், இன்னும் சொல்லப்போனால் பொறுக்குக் கமிட்டியில் அமைச்சர் அவர்கள் சங்கடத்திற்கு உள்ளாகக்கூடிய அளவுக்கு வற்புறுத்தல் வரும். அவருடைய திறமையை முழுக்க முழுக்கக் காட்டி அப்படியே நிறைவேற்றவும், வேண்டுமானால் இன்னும் நல்ல முறையில் நிறைவேற்றவும் வழி காண வேண்டும், இதற்கு எதிர்க் கட்சிக்காரர்கள் அத்தனை பேர்களும் ஒத்துழைப்பைத் தருவார்கள் என்று சொல்லிக் கொள்கிறேன். கூட்டுறவு சம்பந்தப்பட்ட, கூட்டுறவு ஸ்தாபனத்திலுள்ள அத்தனை பேர்களும் தவறு செய்து விட்டார்கள் என்று நான் சொல்லவில்லை, அதிலே நல்லவர்கள் இருந்தால் அவர்களை பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri T. R. RAMAMIRTHA THONDAMAN:** கனம் தாற்காலிக சபைத் தலைவர் அவர்களே, இந்த கூட்டுறவுச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கும் கூட்டுறவு அமைச்சர் அவர்கள் இந்த கூட்டுறவு முறையினால் இந்த நாட்டிற்கு ஒரு நல்ல சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு, கூட்டுறவே நாட்டினுடைய உயர்வு என்ற நிலைமையை நன்றாகப் புரிந்து, கூட்டுறவு முறையை எல்லாப் பகுதிகளிலும், எல்லாத் துறைகளிலும், குறிப்பாக கிராமாந்திரப் பகுதி மக்கள் கூட்டுறவு முறையை நன்றாகப் புரிந்துகொள்ளவேண்டும், கூட்டுறவு முறையில் அவர்கள் பயிற்சி பெற வேண்டும், கூட்டுறவு முறையில்

[Sri T. R. Ramamirtha Thondaman] [30th March 1961

கிராமாந்திரப் பகுதிகளில் உள்ள ஏழை மக்கள் தொழில் துறை, விவசாயத் துறை இன்னும் இதர எல்லாத் துறைகளிலும் பயன் அடைய வேண்டும் என்ற அளவில் இந்த கூட்டுறவுத் துறை வளர்ச்சிக்காக உரிய ஒரு சட்டத்தை கொண்டு வந்திருப்பதற்காக நான் அவரைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

நல்ல கூட்டுறவு முறையை மாகாணம் பூராவுமே இன்று மக்கள் எதிர் பார்க்கின்றனர். ஆனால் அதே சமயத்தில் எதிர்க்கும் சக்தியும் உருவாகி, கூட்டுறவு முறையை அடியோடு ஒழித்து விடுவது என்று முயற்சித்து வருகிறது. இந்த நாட்டினுடைய பிற்பட்ட மக்களை, பின்தங்கிய மக்களை, ஏழை மக்களை, பாரம்பரியமாய் அடிமைப்படுத்தி சுரண்டி வாழ்வதையே ஒரு தொழிலாகக் கொண்டிருந்த நிலை பாதிக்கப்படுகிறது என்ற காரணத்தினால் பெரிய பணக்கார முதலாளிகளும், என் தர்மகர்த்தாக்களும், பண்டார சந்நதிகளும் நம் நாட்டினுடைய சென்ற கால அரசியலில் பெரிய பதவி வகித்த பெரியவர்களும், கூட்டுறவு பற்றி பெரியதாகப் பேசி வந்த தலைவர்களும் கூட இந்தக் கூட்டுறவுப்பண்ணை முறையை நாட்டிலிருந்து அடியோடு ஒழித்துவிட வேண்டுமென்று முயற்சி செய்து வருகின்றனர். இதை ஒழித்துக் கட்டுவதற்காகத் தீவிர பிரசாரம் எங்கு பார்த்தாலும், கிராமம் கிராமமாக நடக்கின்றன. இந்த நேரத்தில், இந்தக் கூட்டுறவு சட்டத்தை, இந்த மாறுதல்களோடு கொண்டு வருவதை நான் பெரிதும் பாராட்டுகிறேன். அப்படிப் பாராட்டுகின்ற போது, மாற்றுக் கட்சி நண்பர் ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி அவர்கள் கூட, இந்தக் கூட்டுறவு முறை சட்டத்தினால் மாற்றுக் கட்சியினரை விட, ஆளும் கட்சியிலே இருக்கக்கூடிய அங்கத்தினர்களுக்குத்தான் பெரிய கஷ்டம் ஏற்படும் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டினார்கள். அதை முழுக்க முழுக்க நான் ஆதரிக்கிறேன். அந்த மாதிரி உண்டு பண்ணுவதற்கு ஒரு இயக்கமே, ஒரு கூட்டமே நாட்டில் தயாராகிக் கொண்டிருக்கிறது. அந்த மாதிரிக் கூட்டம் தயாராகி வருகின்றது என்பதற்காக சர்க்கார் கொஞ்சமும் பின் தங்காமல், எந்த விதமான குழப்பத்தையும் ஏற்படுத்திக் கொள்ளாமல், தைரியமாக இந்தக் கூட்டத்தை அடக்கி ஒடுக்குவதற்கும், அதே சமயத்தில் ஏழை மக்களை, பின் தங்கிய மக்களை, மற்றும் உள்ளவர்களை எப்படிக் காப்பாற்றலாம் என்பதற்கு தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் முதலில் கூறிக்கொண்டு, பின்னர் கூட்டுறவு சாகுபடி முறையைப் பற்றி கூறுகிறேன்.

கூட்டுறவு சாகுபடி முறையை என்னுடைய ஜில்லாவில் ஏற்படுத்துவதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. இந்த தேசத்தில் உணவுப் பற்றாக்குறையைப் போக்குவதற்கு உற்பத்தியைப் பெருக்க வேண்டும். அப்படி உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்றால், தனிப்பட்டவர்களுடைய நிலத்திலிருந்து அதைச் செய்ய முடியாது. கூட்டுறவு முறையினால்தான் செய்ய முடியும். அதற்காகத்தான் கூட்டுறவு சட்டங்கள் அமைத்துக் கொண்டு, அந்தச் சட்டத்தின் அடிப்படையில் நிலங்களைக் கொண்டு வந்து, கூட்டுறவு முறையிலே சாகுபடி செய்வதென்று இன்றைக்கு மூன்று சொசைடிகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. பந்தநல்லூரில் தேவஸ்தான நிலங்களையெல்லாம் சேர்த்து ஒரு கூட்டுறவு சொசைடி இருக்கிறது. அதனால் தேவஸ்தானமும் முன்னைவிட லாபமடைகிறது. அதோடு அங்குள்ள விவசாயிகள் சென்ற காலத்தில் இருந்ததைவிட இப்போது நிலைமை மாறி, நல்ல முறையில் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். நாட்டினுடைய உணவு உற்பத்தியும் கூட்டுறவு முறையினால் பெருகியிருக்கிறது என்பது நன்கு தெரிகிறது. நாட்டினுடைய பொருளாதார வளர்ச்சி, ஏழை மக்களுடைய பொருளாதார வளர்ச்சி, பாமர மக்களின் வாழ்க்கையிலே முன்னேற்றம், கூட்டுறவு ஸ்தாபனத்தினால் ஏற்படுகின்ற பயன் ஆகிய உண்மைகளெல்லாம் சென்ற மூன்றாண்டு அனுபவங்களிலிருந்து நன்கு தெரிய வருகிறது. இந்த உண்மை கனம் அமைச்சர் அவர்களுக்கும் நன்கு தெரியும். இந்த முறையில் அமைக்கப்பட்ட இந்தத் கூட்டுறவு ஸ்தாபனத்தில், கண்டு முதல் செய்யக் கூடியது பல மடங்கு அதிகமாகி, அப்படிப்பட்

30th March 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

கண்டு முதல் ஏற்பட்டதினாலே தேவஸ்தானத்தின் செல்வ நிலை முன்னைய ஆண்டுகளை விட அதிகமாகி, இதிலே கஷ்டப்பட்ட ஊழியர்களுக்கும், குடியானவர்களுக்கும் பொருளாதாரத்திலே தங்களை உயர்த்திக் கொள்வதோடு, நாட்டினுடைய உணவு உற்பத்தியையும் பெருக்குவதற்கு முடிந்தது. அதோடு தேவஸ்தானத்தின் பொருளாதார நிலைமையைப் பார்க்கும் போது சென்ற காலத்தில் 60,000 ரூபாயில் கடனாக இருந்த இந்த பந்தநல்லூர் தேவஸ்தானம் இப்போது ஒன்றரை லட்சம் ரூபாய் கூடுதலாகிக் காட்சியளிக்கின்றதைப் பார்க்கும்போது, குறைந்த குத்தகைக்கு கொடுத்ததைவிட, இப்போது கூட்டுறவு சொசைடிக்குக் கொடுத்ததால், அந்த கடவுள், அன்றைக்கு அதிகக் கடனாக இருந்த கடவுள், குறைந்த குத்தகையினால் கடனாகக் காட்சியளித்தக் கடவுள், கூட்டுறவு சொசைடிகளுக்கு நிலத்தைக் கொடுத்ததன் காரணமாக அதிகத் தொகை கிடைத்து, நஷ்டத்தில் இருந்த தேவஸ்தானம், $1\frac{1}{2}$ லட்சம் ரூபாய் லாபத்தை ஏற்றுக் கொண்டு, இன்றைக்கு செல்வக் கடவுளாகக் காட்சியளிக்கின்ற உண்மையை கடந்த மூன்று வருஷ வித்தியாசத்திலே காண முடிகிறது. ஆனால் அந்த அளவுக்கு கடவுளுக்கு நிறையப் பணம் கிடைத்தாலும், அந்தச் சாகுபடி செய்யக்கூடிய சாகுபடியாளர்களும் பொருளாதாரத்தில் இன்றைக்கு உயர்ந்திருக்கிறார்கள். அதோடு நாட்டினுடைய தேவையான உணவு உற்பத்தியும், பூர்த்தி செய்கின்ற அளவிற்கு இன்றைக்கு வளர்ச்சியடைந்துள்ளது. இந்த வளர்ச்சியை கண்கூடாக கனம் அமைச்சர் அவர்கள் அங்கிருந்து வரக்கூடிய ரிப்போர்டுகளிலும், அவர்கள் நேரில் பார்த்த முறையிலும் கண்டிருக்கிறார்கள். ஆகவேதான் இந்த முறையை எல்லாவிடங்களிலும் பரப்ப வேண்டுமென்று கனம் தேவஸ்தான அமைச்சர் அவர்களையும், கனம் கூட்டுறவு அமைச்சர் அவர்களையும் வற்புறுத்திக்கொண்டு வருகிறேன். இன்று மட்டும் சொல்லவில்லை. நானும் என் குருநாதர் ஸ்ரீ ஜி. நாராயணசாமி நாயுடு அவர்களும் கடந்த மூன்று ஆண்டுகளாக வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். ஆனால் அடியாட்கள் வைத்து, எங்களை அடிக்கக்கூடிய ஏற்பாடுகள் எல்லாம் நடந்த அனுபவத்தைத்தான் நாங்கள் கண்டோம். அதைத்தான் எங்களால் சாதிக்க முடிந்தது. இந்தத் தவறுகளில் கனம் அமைச்சர் தலையிட்டு ஒரு உடன்பாடு செய்யவோ அல்லது ஒரு சட்டத்தையாவது கொண்டு வரவோ முயற்சிக்கவில்லை. கூட்டுறவு முறை நல்ல லாபத்திலே நடக்கின்றது என்பதைக் கண்கூடாகப் பார்க்கின்றார்கள். விவசாயிகளுடைய பொருளாதாரமும் அதனால் வளர்கிறது. அதற்கு ஒரு சட்டத்தின் மூலம் இந்த தேவஸ்தான, மடாலய அல்லது தனிப்பட்டவர்களிடம் இருக்கக்கூடிய அதிகப்படியான நிலங்களை கூட்டுறவு சாகுபடி செய்யவோ, கூட்டுறவு ஸ்தாபனத்தின்கீழ் கொண்டுவரவோ செய்து, அந்த நிலத்தினுடைய அளவு என்ன, அதற்கு சமீபத்திலே உள்ள தனிப்பட்டவர்களிடத்திலுள்ள நிலத்தின் அளவு என்ன, அதிலே என்ன வருவாய் வருகிறது, இதிலே என்ன வருவாய் வருகிறது என்ற ஏற்றத் தாழ்வுகளை ஒப்பிட்டு, தனிப்பட்டவர்களுடைய நிலத்திலே உணவு உற்பத்தி பெருகியிருக்கிறதா என்பதையெல்லாம் கணக்கிட்டுப் பார்க்க வேண்டும். நிச்சயம் கூட்டுறவு சாகுபடியிலே நல்ல அபிவிருத்தி இருப்பதைக் காண முடியும் ; முடியவும் செய்கிறது. தனிப்பட்டவருக்கு எந்தவிதத் தகுதியும் கிடையாது. அவர்களுக்கு வயலிலே இறங்கத் தெரியாது. அப்படி இறங்கினாலும் உழத் தெரியாது ; அப்படி உழுதாலும் சாகுபடி செய்யவும் தெரியாது. எந்தவித விவசாயப் படிப்போ பட்டமோ பெற்றதும் கிடையாது. சாகுபடி சம்பந்தமான, விளைச்சல் சம்பந்தமான எந்தவித அனுபவமும் கிடையாது. வயலிலே முழு நேரமும் உழைப்பதும் கிடையாது. அப்படியிருக்கும்போது, தனிப்பட்டவர்களுடைய நிலத்தை எடுத்து கூட்டுறவுப் பண்ணையாகச் செய்தால், அப்படிப்பட்ட அமைப்பு ஒன்று ஜனநாயக அடிப்படையிலே ஏற்படுமானால், இன்றைக்கு விவசாயிகளிடையே இருக்கும் இந்த அவல நிலை அவர்களுக்கு வரவே வராது. அதற்கு ஒரு சட்டம் போட்டுச் செய்வதுதான் மிகவும் பொருத்தமானது. உழைக்கின்றவனுக்கே நிலம் கிடைப்பதற்கு உரிமை, இருக்க வேண்டும். அப்படிப்பட்ட உரிமை அவர்களுக்குக் கொடுக்கப்பட்டு, கூட்டுறவு முறையிலே சாகுபடி செய்தால், அவர்களும் பயனடைகிறார்கள். நாட்டிற்கும் பயன் ஏற்படுகிறது, அதே நேரத்தில் பொருளாதாரமும்,

உயர்கிறது. இதைக் கடவுள் கூட வேண்டாமென்று சொல்லமாட்டார், அவர் இப்படிக் கொடுப்பதால், அந்தக் கடவுளுக்கு இன்னும் நல்ல முறையிலே பூஜையும் செய்ய முடியும்.

**THE HON. SRI P. KAKKAN :** கனம் தலைவர் அவர்களே, கனம் அங்கத்தினர் அவர்கள் முன்னாலேயேகூட மடாலயங்களைப் பற்றிச் சொன்னார்கள். அவர்கள் எல்லாம் நல்லபடி வழி காட்டவும், ஒத்துழைக்கவும் தயாராக இருக்கிறார்கள். அனேக இடங்களில் கூட்டுறவு முறையில் வைத்துக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். கட்டாயம் அவர்கள் இதற்கு தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவிக்க மாட்டார்கள் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

**SRI T. R. RAMAMIRTHA THONDAMAN :** கனம் அமைச்சர் அவர்கள், அந்த பாதிக்கப்பட்ட வர்க்கம் ஏதோ இந்தக் கூட்டுறவு முறையை விரும்புவதாகத் தெரிவிக்கிறார்கள். அந்த எண்ணம் அவர்களுக்கு இருப்பது, ஏற்பட்டது குறித்து மிக்க மகிழ்ச்சி. கனம் அமைச்சர் அவர்கள் மூலம் நான் மேலும் தெரிந்து கொள்ள விரும்புவது, அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையோ, எண்ணமோ அவர்களுக்கு உண்மையில் ஏற்பட்டுவிட்டதா என்பதுதான் இன்னும் பெரிய சந்தேகமாகத்தான் இருக்கிறது. தனிப்பட்ட முறையில் அவர்கள் சந்தித்துப் பேசியதில் அந்த முறைக்கு சம்மதம் தெவிரிவித்தார்களோ, என்னவோ, எல்லாம் சந்தேகமாகத்தான் இருக்கிறது. அப்படி அவர்கள் சம்மதப்பட்டுக் கொடுத்தால், நான் வேண்டுமானால் எத்தனை அர்ச்சனை வேண்டுமானாலும், அந்தக் கடவுளுக்குப் பண்ணுவதற்குப் பதில் இவர்களுக்குப் பண்ணிக் கொண்டிருக்கிறேன். அதிலே எவ்வித ஆட்சேபணையும் கிடையாது. ஆனால் அந்தத் துறை அமைச்சரிடம் பலமுறை கேட்டேன். கள்ளப்புலியூரில் ஒரு கூட்டுறவுப்பண்ணை அமைப்பதற்காக முயற்சிகள் செய்து ஒரு சங்கம் ஏற்படுத்தப்பட்டது. அதில் 90 பேர்கள் மெம்பர்களாக ரிஜிஸ்தர் செய்யப்பட்டார்கள். பின்பு தர்ம ஸ்தாபனத்தை நிலம் கொடுக்கும்படி கேட்டு கிடைக்கவில்லை. பலமுறை வற்புறுத்தி கூட்டுறவு முறையில் சாகுபடி செய்யலாம் என்று கேட்ட சாகுபடியாளர்களுக்கு உண்மையிலே கிடைத்த வெகுமதி அடியாட்களால் அடிக்கப்பட்டு தொந்தரவுக்கு உள்ளானதுதான். நூற்றுக்கணக்கான ஹரிஜனங்கள் பாதிக்கப் பட்டார்கள். அந்தப் பகுதியிலே கடந்த மூன்றாண்டுகளாக முயற்சி செய்தும், இன்னும் நிலங்கள் கிடைத்தபாடில்லை. இந்த நிலைமை இந்தக் கூட்டுறவு முறையிலே நீக்கப்பட வேண்டுமென்றால், மாற்றியமைக்கப்பட வேண்டுமென்றால், இப்போதுள்ள சூழ்நிலையைச் சீர்திருத்தி அமைக்க வேண்டுமென்றால், அந்த ஸ்தாபனங்களையும், அந்த ஸ்தாபனத் தலைவர்களையும், நிலச் சுவான்களையும் சர்க்கார் பெரு முயற்சி எடுத்துக் கொண்டு, இந்தக் கூட்டுறவு முறைக்கு வருவதற்கு இணங்கச் செய்ய வேண்டியது அவசியமென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். அதற்காக நாம் அவர்களுடைய நிலங்களைக் கேட்டு வாங்குவது என்பது எளிதல்ல. அந்த நிலைமையை மாற்றிச் சட்டபூர்வமாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான அவசியத்தைக் கொண்டும், நாட்டினுடைய தேவையின் அவசியத்தைக் கொண்டும் உழுபவனிடம் நிலம் நேரடியாகக் கிடைக்கும்படிச் செய்ய வேண்டும். அதற்குக் கூட்டுறவு முறையில் சாகுபடி செய்வது மிகுந்த பயனை அளிக்கும், கூட்டுறவு முறைதான் அவர்களுக்கு நல்ல பலனை அளிக்கவும் முடியும். அந்த முறையிலே பயன்படும்படி, சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றுவதுதான் நல்லது என்பதை நான் இந்த மன்றத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். கிராமங்களில்கூட கூட்டுறவு சாகுபடி செய்யக் கூடிய சாகுபடியாளர்களில் ஒருவருக்கொருவர் துவேஷம், கட்சிப் பிரதிகட்சி, படையாச்சி பிள்ளை சண்டை, பிள்ளை ஹரிஜன் சண்டை இம்மாதிரி விஷம பேதத்தை உண்டு பண்ணி கூட்டுறவு சாகுபடி முறையை மறைமுகமாக அழிப்பதற்குச் சதிகள் பல நடக்கின்றன. இவைகளெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு சீர்திருத்தப்படவேண்டும். ஆங்காங்கு கிராமங்

30th March 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

களிலே கூட்டுறவு முறையில் சாகுபடி செய்யப்பட வேண்டும். கூட்டுறவு சாகுபடி முறையில் நவீன சாகுபடி முறைகளைப் புகுத்தி அதில் விசேஷ கவனம் செலுத்தவேண்டும். கூட்டுறவு சாகுபடி முறையில் தஞ்சை ஜில்லாவில் என்னுடைய தொகுதியில் ஆரம்பிக்கப்பட்ட 4, 5 சொஸைடிகள் போதாது. குறைந்தது 150 சொஸைடிகள் அமைப்பதற்குரிய தேவஸ்தான, மடாலய நிலங்கள் இருக்கின்றன. எல்லா இடங்களிலும் சொஸைடிகள் அமைப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும். அதற்கு சன்னிதானம் தானாக வந்து நிலத்தைக் கொடுத்தாலும் சரி, அல்லது சர்க்கார் சட்டம் போட்டு நிலத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, நாங்கள் கேட்பது கூட்டுறவு முறையில் சாகுபடி செய்வதற்கு நிலம் கொடுங்கள் என்பதுதான். கூட்டுறவு முறையில் சாகுபடி செய்வதற்கு நிலம் கொடுத்தால் உற்பத்தியை பெருக்கிக் காட்டுகிறோம், சர்க்கார் தேவையைப் பூர்த்தி செய்கிறோம், பொருளாதார வளர்ச்சியை உயர்த்துவதற்கு வழி செய்கிறோம் என்று உறுதி கூறுகிறோம். அதைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கூட்டுறவு நாணயச் சங்கங்கள் ஏற்படுத்தியிருக்கிறோம். கிராமாந்திரங்களில் கூட்டுறவு முறையில் கைத்தொழில்களை நடத்தவேண்டுமென்று சொல்லுகிறோம். கூட்டுறவு முறையில் கிராமக் கைத்தொழில்களை ஆரம்பிப்பதற்கு கிராமத்தார்களுக்கு சரிவரத் தெரியவில்லை. அதைப் புரிய வைப்பதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள அதிகாரிகள் அதிலே சில சிக்கல்களை உண்டு பண்ணிவிடுகிறார்கள். கிராமங்களில் கிராம நாணய சங்கங்கள் பல நோக்கு கூட்டுறவு சங்கங்கள், கூட்டுறவுக் கைத்தொழில் சங்கங்கள் இம் மாதிரி பல சங்கங்கள் கிராமங்களில் பல பகுதிகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சங்கங்களில் கடன் வாங்குவதற்கு நாம் செல்லுவோமானால், மத்திய பாங்குக்குச் செல்ல வேண்டும். கூட்டுறவு நாணயச் சங்கம், பல நோக்குக் கூட்டுறவு சங்கம், கூட்டுறவு கைத்தொழில் சங்கம், சட்டி பானை தொழிலாளர்கள் கூட்டுறவு சங்கம், நாட்டுச் செக்குத் தொழிலாளர்கள் சங்கம் போன்ற பல சங்கங்கள் இருக்கின்றன. கடன் கேட்கும்பொழுது பல கஷ்டங்கள் இருக்கின்றன. மூன்று டைரக்டர்களின் கையெழுத்து வாங்க வேண்டி யிருக்கிறது. ஜாமீன்தாரும் சேர்ந்து பங்குத் தொகை கட்டவேண்டிய நிலைமை இருக்கிறது. அது போகட்டும். மேலும், கடன் கொடுப்பதற்கு அந்த நபருக்குச் சொத்து இருக்கிறதா, ஜாமீன்தாருக்குப் போதுமான வசதி இருக்கிறதா என்றெல்லாம் கேட்கிறார்கள். கூட்டுறவு முறை நிரந்தரமாக நல்ல முறையில் வளர வேண்டுமென்று சொன்னால், ஒருவித சொத்தும் இல்லாமல் தான் குடியிருக்கும் வீடுகூட யாருடையது என்று சொல்ல முடியாமல் அல்லல் பட்டுக்கொண்டிருக்கிற ஏழை விவசாயி, பாட்டாளி பாமர மக்கள், ஹரிஜனங்கள் ஆகியோர்களுக்கு ஜாமீன் இல்லாமல் கடன் கொடுக்க வேண்டும். அவன் வசிக்கும் வீடு டெல்லியில் இருப்பவருக்குச் சொந்தமோ அல்லது கல்கத்தாவில் இருக்கும் நபருக்குச் சொந்தமோ அல்லது திருக்கயிலாயத்தில் இருப்பவருக்குச் சொந்தமோ, அவருக்குச் சொத்து இருக்கிறதோ, இல்லையோ என்ற நிலையில் இருக்கக்கூடியவர்களுக்கு கடன் கேட்கும் பொழுது, கடன் கேட்கக் கூடிய நபர் பேரில் நம்பிக்கை வைத்து அவர் வசிக்கிற வீட்டின் கூறையின் மீது நம்பிக்கை வைத்து அவருடைய சொந்த ஜாமீன் பேரிலேயே கட்டாயம் கடன் கொடுக்க வேண்டும். அதற்கு ஜாமீன் கேட்க வேண்டிய அவசியமில்லை. அவர் மட்டும் பங்குத் தொகை கட்டினால் போதும் என்ற நிலைமை இருக்க வேண்டும். மற்றவர்கள் பங்குத் தொகை கட்டவேண்டிய அவசியமில்லை. இம்மாதிரி கிராமத்திலுள்ளவர்களுக்கு, பாமர மக்களுக்கு, ஏழை எளியவர்களுக்குச் சாதாரணமாக காலாகாலத்தில் சுலபமாகக் கடன் கிடைப்பதற்கு வழிவகைகளை உண்டாக்க வேண்டும். ஒரு நபருக்குக் கடன் வேண்டுமென்றால் கூட்டுறவு சங்கத் தலைவரையும், டைரக்டர்களையும் 4 தடவை போய் பார்க்க வேண்டி யிருக்கிறது. அரை வட்டிக்குப் பணம் கிடைக்கும் என்ற நோக்கத்தோடு கூட்டுறவு சங்கத்தில் கடன் வாங்க முற்படும் நபருக்கு, அந்தக் கடன் கிடைப்பதற்குள் அதற்காக இம்மாதிரி செலவழிக்க வேண்டிய தொகையைக் கணக்குப் பார்த்தால் 15 சத விகித வட்டிக்கு வந்து விடுகிறது. இதற்காகக் கூட்டுறவு சங்கத்தில் கடன் வாங்குவதைவிட செட்டியாரிடமே பிராமிசரி நோட்டின் பேரில் அதிக வட்டிக்குக்

கடன் வாங்கியிருக்கலாமே என்றுகூடத் தோன்றுகிறது. இந்த எண்ணம் பாமர மக்கள் மத்தியில் ஏற்படும்படி விடக்கூடாது. அதிலுள்ள சிக்கல் களை மாற்றி, அதில் இருக்கக்கூடிய தகராறுகளைத் தீர்த்து, ஜாமீன் இல் லாமல் சுலபமான முறையில், காலதாமதம் இல்லாமல் கடன் கிடைக்கக் கூடிய நிலையை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும், கூட்டுறவு நெசவாளர்கள் சொஸைடிகளில் ஆடிட் முறை நடத்துவது பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பத்து வருஷங் களுக்கு முன்னுல் ஒருவர் தலைவராகவோ, அல்லது டைரக்டராகவோ ஒரு சொஸைடியில் இருந்திருக்கலாம். ஐந்து, ஆறு வருஷங்கள் கழித்து ஆடிட் செய்யும்பொழுது, அங்கு இருக்கக்கூடிய அதிகாரிகளோ மற்றவர்களோ பணத்தைக் கையாடல் செய்திருந்தால், தில்லுமுல்லுகள் செய்திருந்தால், அது முன்பிருந்தவர்களைப் பிடிக்கிறது. அந்தந்த ஆண்டில் ஒழுங்காக ஆடிட் செய்யும் முறையை ஏற்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் அவ் வப்பொழுது ஏற்படக்கூடிய தவறுகளைக் கண்டுபிடிக்க வசதியாக இருக்கும். துயிலி என்ற கிராமத்தில் நெசவாளர்கள் கூட்டுறவு சங்கத்தில் ரூ. 80 ஆயிரம் கையாடல் செய்யப்பட்டு, அதன்பேரில் விசாரணை செய்ததில் ஸ்பெ ஷல் ஆபீசர் ஜவாப்தாரி என்ற நிலைமை ஏற்பட்டிருப்பதைப் பார்க்கிற பொழுது, கிராமாந்தரங்களில் நீண்ட காலமாகக் கணக்குகள் ஆடிட் செய் யாமல் இருப்பதினுல் பணங்கள் கையாடல் செய்யப்படக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. மேலும் அதனுல் அநேக தவறுகள் ஏற்படுகின்றன. இதை யெல்லாம் தவிர்ப்பதற்கு எல்லா சொஸைடிகளிலும் அந்தந்த ஆண்டிலேயே ஆடிட் செய்துவிட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கிராமாந்திரப் பகுதிகளில்தான் தானியங்கள் அதிகப்படியாக விளை கிறது. பெரிய முதலாளிகள். பெரிய வியாபாரிகள் கேரளா மற்றைய பகுதிகளிலிருந்து வந்து ஏராளமான பணத்தைப் போட்டு கிராமாந்திரங் களில் வீடுகளை வாடகைக்கு எடுத்து ஊரிலே இருக்கிற நெல்லையெல் லாம் ஒரு விலையைக் கொடுத்து வாங்கி, அந்த வீடுகளில் ஸ்டாக் செய்து விடுகிருர்கள். இதனுல் வீடுகள் வாடகைக்குக் கிடைப்பதே கஷ்டமாக இருக்கிறது. பிறகு நல்ல விலை வரும்பொழுது மூட்டைக்கு 5, 6 ரூபாய் வைத்து விற்று கொள்ளை லாபம் அடிக்கிருர்கள். இம்மாதிரி நடுக் கொள்ளைக்காரர்கள் நடந்துகொள்ளுவதைத் தவிர்க்க வேண்டும். இந்த நிலைமைக்கு இந்த நடுக்கொள்ளைக்காரர்கள் செல்லுவதற்கு விடக்கூடாது. கிராமங்களிலுள்ள விவசாயிகளுக்கு ஒரு கிட்டங்கி ஏற்படுத்த வேண்டும். அவர்கள் அந்த கிட்டங்கில் தானியங்களைச் சேமித்து வைத்து, நல்ல விலைக்கு விற்று, அதிலிருந்து கிடைக்கக்கூடிய லாபம் உற்பத்தி செய்யக்கூடிய விவ்சாயிகளுக்குப் போய்ச் சேரும்படியான ஒரு நிலைமையை உண்டு பண்ண வேண்டும். கிராமங்களில் கூட்டுறவு சங்கங்கள் அமைத்து அங்கே தானியங்களைச் சேமித்து வைப்பதற்குக் கிட்டங்கிகள் ஏற்படுத்த வேண்டும். இடைக்கொள்ளைக்காரர்கள் இம்மாதிரி முதல் ஒன்றுமில்லாமல் ரயிலி லேயே சென்றுகொண்டு ஏழை மக்களைச் சுரண்டி கொள்ளை லாபம் அடிப்பதைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்ற கருத்தை தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு, எனக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்ததற்காக தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRIMATHI A. S. PONNAMMAL: கனம் சபைத் தலைவர் அவர்களே, நம்முடைய அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் கூட் டுறவு சொஸைடிகள் பில்லை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த "பில்லில்" பேசும்பொழுது சில அங்கத்தினர்கள் எங்கே பார்த்தாலும் ஊழல்கள் இருப்பதாகப் பேசி ஞர்கள். தயவு செய்து "ஊழல்" என்ற வார்த்தையைச் சட்ட மன்றத் தில் சொல்லாமல் இருந்தால் நன்ருக இருக்கும். ஏதோ ஒரு சில இடங் களில் தவறுகள் இருக்கலாம். ஆனுல், பல சங்கங்கள் நன்ருக நடக்கக் கூடும். இந்த ஊழல் என்ற வார்த்தை கொஞ்சம் சங்கடமான நிலை

30th March 1961] [Srimathi A. S. Ponnammal]

மையை உண்டாக்குகிறது. கனம் அங்கத்தினர்கள் இனி மேலாகிலும் "ஊழல்" என்ற வார்த்தையை விட்டுவிட்டு, அதற்குப் பதிலாக "தவறுகள் இருக்கின்றன" என்று கூறுவார்களேயானல், அது நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன். எங்கேயாவது ஓரிரண்டு இடங்களில் தவறுகள் நடக்கலாம் என்பதை நாம் ஒத்துக் கொள்ளுவோம். ஆனல் அந்த அடிப்படையை வைத்துக் கொண்டு எல்லா இடங்களிலும் ஊழல்கள் இருக்கின்றன என்று சொல்லி, அதனல் நன்றாக வேலை செய்யக்கூடிய சங்கங்கள் கூட எல்லா இடங்களிலும் இப்படித்தான் நடக்கிறது போலிருக்கிறது. ஆகையினல், நாமும் தவறு செய்வோம் என்ற உணர்ச்சியை வளர்த்துக் கொள்ளக்கூடிய நிலைமையை ஏற்படுத்தக் கூடாது.

ஒரு சொஸைடி நன்றாக நடக்க வேண்டுமென்று சொன்னல் ஒரே நபர் பல ஆண்டுகளுக்கு அந்த சொஸைடியில் பொறுப்பு வகிக்கக் கூடாது, அந்த முறை தவிர்க்கப்பட வேண்டும் என்ற அடிப்படையில் தான் இந்த "பில்" கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னர்கள். அது மிகவும் வரவேற்கக்கூடிய விஷயம். ஒரே நபர் ஒரு சொஸைடியின் தலைவராகவோ, அல்லது காரியதரிசியாகவோ 10, 15 ஆண்டுகளுக்கு நீடித்திருந்தால், மற்ற தவறுகள் நடந்து கொண்டிருப்பதை அகற்ற முடியாத அளவுக்கு ஒரு நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. அந்த நிலைமையை மாற்றுவதற்கு இந்த மசோதாவில் வகை செய்யப்பட்டிருப்பது குறித்து நான் பாராட்டுகிறேன். ஒரு நபர், 3, 5 ஆண்டுகளுக்கு மேல் இருக்கக் கூடாது என்ற நிலைமையை நல்ல முறையில் ஸ்திரமாக உருவாக்க வேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அந்த முறையில் பார்த்தால், ஒரே தலைவர், 5, 6 சொசைடிகளிலே தலைவராக இருக்கிறர். இங்கே பால் சொசைடி தலைவர், பிறகு கிராம கூட்டுறவு சங்கத் தலைவர், விவசாய சங்கத் தலைவர் என்று இவ்வாறு பல சொசைடிகளிலே தலைவராக இருக்கிறர். அப்படி இருப்பதால் ஒரு சில தவறுகள் ஏற்படக் காரணமாக இருக்கிறது. செலக்ட் கமிட்டியில் ஒருவர் ஒரு சங்கத்திலேதான் தலைவராக இருக்க வேண்டும், அதற்குமேல் இருக்கக் கூடாது என்ற நிபந்தனையை ஏற்படுத்தினல், பல இடங்களில் ஒருவரே தலைவராக இருப்பதைக் கட்டுப்படுத்த முடியும், இயக்கமும் நன்றாக அமையும் என்று குறிப்பிட்டுக்கொள்ள விரும்புகிறேன். 12 noon

பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள், வீடுகட்டும் சொசைடிகளை எடுத்துக் கொண்டால், ஒருவர் தலைவராக இருந்தால், அவருக்கு வேண்டிய நபர்களையே சேர்த்துக் கொள்ளுகிறர்கள்; தகுதிஇருந்தால்கூட ஏதாவது காரணம் சொல்லி, மற்றவர்களை வெளியேற்றி வைக்கிறர்கள். அப்பேர்ப்பட்டவர்கள் ரிஜிஸ்ட்ராருக்கு அப்பீல் செய்தால்கூட, அது ஜில்லா அளவில் வந்து, பிறகு சென்னைக்கு மாகாண அளவில் வந்து, கடைசியாக ஆர்டர் போட காலதாமதம் ஆகிறது. ஆகவே, இதை டிப்டி ரிஜிஸ்ட்ரார் அவர்களே பார்த்து, தகுதியுள்ளவர்களாக இருந்தால் அவர்களைச் சேர்த்துக் கொள்ளலாம் என்றிருந்தால், இன்னும் கொஞ்சம் நன்றாக இருக்கும் ஏழை எளியவர்களுக்கு நல்லதொரு வாய்ப்பாக இருக்கும் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். கனம் அமைச்சரவர்கள் கேள்வி நேரத்தில் சொன்ஞர்கள், அது இந்த பில்லில் வராவிட்டாலும், குறிப்பிட விரும்புகிறேன். ரூரல் ஹௌசிங் ஸ்கீமில், 80 சத விகிதம் மாகாண சர்க்காரும், மத்திய சர்க்காரும் போடுவார்கள், மற்ற 20 சத விகிதத்தை ஜனங்களே போட வேண்டும் என்றல், ஏழை எளிய மக்கள், நடுத்தர விவசாயிகள், கூலி விவசாயிகள், அப்படிக் கொடுக்க வேண்டுமென்றல், அது முடியாது. கருணையுள்ள அமைச்சர் அவர்கள் அதை மறு பரிசீலனை செய்து 87½ சத விகிதம் கொடுக்க முயற்சி எடுக்கிறேம், மீதியுள்ள 12½ சத விகிதத்தை மட்டும் மக்கள் போட்டால் போதும் என்றர்கள். அந்த அடிப்படையில் உத்தரவு போட்டால், அதிகாரிகளுக்கு, அவர்கள் வீடுகட்டும் திட்டத்தை நல்ல முறையிலே அமுல் நடத்த முடியும். ஆகவே கனம் அமைச்சர் அதற்கு உடனடியாக வேண்டியதைச் செய்து கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

பர்சனல் செக்யூரிடியில் கடன் கொடுக்கப்படுகிறது. தனி நபர் ஜாமீன் பேரில் என்று உத்தரவு போட்டிருந்தாலும், பாங்குகளிலிருந்து கடன் தொகைகள் கொடுக்கக் காலதாமதம் ஏற்படுகிறது. சிற்சில சமயங்களில்

[Srimathi A. S. Ponnammal] [30th March 1961]

" உங்களுக்குக் கொடுக்க முடியாது " என்று சொல்லி விடுகிறார்கள். அந்த அளவில் குத்தகை விவசாயி, சாதாரணமாக ஒரு ஏக்கர், இரண்டு ஏக்கர் வைத்திருக்கும் விவசாயிகள், மற்றவர்களிடம் கடன் வாங்கி, அதிக வட்டிக்குக் கடன் வாங்குவதனால், வட்டி கூடக் கட்ட முடியாத நிலையில் இருக்கிறார்கள். பாங்குகளில் கொடுப்பதில்லை, கொடுத்தாலும் காலதாமதம் ஏற்படுகிறது. ஆகவே, கடன் வழங்கும் போது, காலதாமதம் இல்லாமல் கொடுக்க வேண்டும். நாம் கொடுப்பது என்னவோ 200, 300 ரூபாய்தான். அதையாவது துரிதமாகக் கொடுத்தால், ஏழை எளிய விவசாயிகளுக்கு நல்ல உபயோகமாக இருக்கும், பலனுள்ளதாக இருக்கும்.

இன்னொரு விஷயம். இந்த மல்டி-பர்பஸ், பலநோக்கு சங்கங்கள். நகரப் புறங்களைப் பற்றித் தெரியாது, கிராமப் புறங்களிலே இவைகள் இருந்தால் நலமாக இருக்கும். ஆகவே இந்த மாதிரியான சங்கங்களை விஸ்தரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த அளவில் செய்தால் மக்கள் அந்தச் சங்கங்களின் மூலமாக நல்ல பயனடைவார்கள். ஆகவே இதைச் சற்று தீவிரப்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னொன்று நெசவாளர்கள் சம்பந்தப்பட்டது. இன்றைக்கு எப்படியிருக்கிறது என்றால், கிராமப் புறங்களிலே, இந்த ஏழை எளியவர்கள் மாஸ்டர் வீவர்களிடத்தில் கடன் வாங்கி அவர்கள் கையில் இருக்கிறார்கள். ஏதாவது இம்மாதிரிக் கூலி நெசவாளிகள் ஒரு கூட்டுறவு சங்கம் ஆரம்பிக்க வேண்டும் என்றால், அவர்கள் முதலில் மாஸ்டர் வீவர் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். கடனைக் கொடுத்து விட்டுத்தான் வெளியே வரவேண்டும். ஆகவே, விதிகளைத் தளர்த்தி, இந்த நெசவாளிகளுக்கும் உதவி செய்யும் வகையில், அவர்கள் கடன்களைத் திருப்பிக் கொடுக்கவும் உதவி செய்தால் அவர்களும், அவர்கள் குடும்பங்களும் வாழ வகை செய்தவர்கள் ஆவோம்.

என் தொகுதியிலிருந்து 5, 6 தந்திகள் வந்திருக்கின்றன. ஒரே நபரே பல சங்கங்களில் தலைவர்களாக இருக்கக் கூடாது, பல ஆண்டுகளுக்கும் இருக்கக் கூடாது என்று தந்திகள் நேற்று வந்தன. அந்த அடிப்படையில் இனிமேலாவது ஏற்பாடு செய்தால் நல்லதாக இருக்கும் என்று கூறிக்கொண்டு முடிக்கிறேன்.

SRI A. MARIAPPAN : கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் கொண்டுவந்திருக்கும் மசோதாவை ஆதரிக்கிறேன். அமைச்சர் கூறினார்கள், ஏற்கனவே மெம்பர்களைச் சேர்த்துக் கொள்ள இடம் செய்யப்பட்டிருக்கிறது என்று. பொதுப்படையாக மெம்பர்களைச் சேர்த்துக் கொள்வதில்லை என்பது சரியில்லை. அந்த மனோபாவம் தவறு. பல இடங்களிலே, மெம்பர்களைச் சேர்க்கிறார்கள். சில ஜில்லாக்களிலே சேர்த்துக் கொள்ளாமல் இருக்கலாம், ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், பொதுப்படையாக சேர்த்துக் கொள்வதில்லை என்று சொல்வது மிகவும் வேதனையாக இருக்கின்றது. அதற்காகத்தான் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லுவதும் வேதனையாக இருக்கின்றது. வேண்டியவர்களுக்குச் சலுகைகள் கொடுக்கப்படுகின்றன என்று சொல்லப்பட்டது. அப்படிக் கொடுக்கப்படுவது முடியாத காரியம் என்பதை என்னுடைய சிறு அனுபவத்தைக்கொண்டு,—10 ஆண்டுகளாக நான் இதில் ஈடுபட்டிருக்கிறேன்,—நான் சொல்ல முடியும். வேண்டியவர்களுக்குக் கொடுக்க முடியாத ஒரு நிலைமைதான் இன்றைக்கு இருக்கிறது. உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்கள் என்றால், அவர்கள் ஒன்றும் தங்களுக்கு வேண்டியவர்களுக்குச் செய்துவிட முடிவதில்லை. இன்றைக்கு ஒரு கலெக்டர் இருக்கிறார் என்றால், அவர் குமாரர் இன்னொரு ஜில்லாவில் கீழ் உத்தியோகம் பார்க்கலாம், அல்லது அவர் கீழேயே டெபுடி கலெக்டராக இருக்கலாம் ; ரெஜிஸ்ட்ரார் இருக்கிறார்களென்றால், அவருடைய மகனோ அல்லது மறுமகனோ கூட்டுறவு இயக்கத்தில் ஏதாவது ஒரு உத்தியோகஸ்தராக இருக்கலாம். இவர் தலைமை நிர்வாகஸ்தர் என்ற காரணத்தினால், நல்ல திறமை உள்ளவர்களாக

30th March 1961] [Sri A. Mariappan]

இருந்தாலும், சந்தேகிப்பார்கள் என்ற அளவில் ஒன்றும் செய்துவிட முடிவதில்லை ; முயல்வதில்லை. ஆகவே, வேண்டியவர்களுக்குச் சலுகைகள் செய்துவிடுவது என்பது முடியாத காரியம். அதுதான் என் அபிப்பிராயம்.

சில இடங்களிலே, எனக்குக் கூட நன்ருகத் தெரியும், யார் தலைமை ஸ்தானத்தில் இருக்கிருர்கள் என்று பார்த்துத்கான் சேர்பவர்கள் கூட சேர்கிருர்கள். ஒருவரே நிர்வாகத்தில் இருப்பதை ஆட்சேபித்தார்கள். அதைப் பார்த்தால் முடியாது. அநேகமாக யார் தலைமை ஸ்தானத்தில் இருக்கிருர் என்று பார்த்து, அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்ற காரணத்திஞல், மக்கள் அவர்மேல் நம்பிக்கை வைத்திருக்கிருர்கள் என்ற காரணத்திஞல், பல இடங்களிலே நல்லபடியாக அந்தச் சங்கங்கள் நடைபெறுகின்றன. உதாரணமாக ஒரு அர்பன் பாங்கில் குறிப்பிட்ட தலைவர் இருக்கிருர் என்ற காரணத்திஞல், பலர் டெபாஸிட்டுகள் போடுகிருர்கள். பெயர் சொல்ல விரும்பவில்லை ; அந்த இடத்திலே சில காலம் தலைவர் அவகாசம் இல்லையென்று வேருெருவரைப் போட்டபோது, அந்த அர்பன் பாங்கு நல்ல முறையிலே நடக்கவில்லை. மீண்டும் அந்தப் பழைய தலைவரே வந்த பிறகு தான், அது பழைய மாதிரி நடக்க ஆரம்பித்தது. ஆகவே, அவர்கள் செல்வாக்கு காரணத்திஞல், அவர்கள் அனுபவத்திஞல், அவர்கள் நீடித்து இருப்பதஞல், சங்கங்கள் நல்ல முறையிலே செயல்பட நலமாக இருக்கும். மற்றவர்கள் மேலும் நல்ல முறையில் நடத்தக்கூடியவர் என்ருல் அப்படிப் பட்டவர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுவர சந்தர்ப்பம் இருக்கின்றன. வேறு மெம்பர்களையும் சேர்த்துக் கொண்டுதான் ஆகவேண்டுமென்று ரிஜிஸ்ட்ரார் உத்தரவிட வேண்டியது அவசியம். அப்போதுதான் மற்றவர்கள் வருவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படும். அதேபோல விலகிக் கொள்கிறவர்கள் விலகிக் கொள்வதற்கும் இந்தச் சட்டத்தில் சந்தர்ப்பம் இருக்கவேண்டும்.

(Deputy Speaker in the Chair.)

இந்தக் கூட்டுறவு நெசவாளர் சங்கங்களில் சேர்ந்து ஒரு ஆண்டு, இரண்டாண்டு கழித்து விலகிக் கொள்ள விரும்புகிறவர்களைக் கூட நாங்கள் விலகிக் கொள்ள அனுமதித்திருக்கிருேம். எப்போது வேண்டுமாஞலும் சேரலாம், எப்பொழுது வேண்டுமாஞலும் விலகிக் கொள்ளலாம் என்பதற்கு இந்தச் சட்டத்தில் வகை இருந்தால் தான் கூட்டுறவு இயக்கம் நன்ருக வளர்ச்சி அடைவதற்கு வழியேற்படும். இந்த ராஜ்யத்தில் கனம் அமைச்சர் வெங்கட்டராமன் அவர்கள் இவ்விலாகா பொறுப்பை ஏற்ற பிறகும் ஸ்ரீ பலசுந்தரம் அவர்கள் கூட்டுறவு ரிஜிஸ்ட்ரார் பதவியேற்ற பிறகும் இந்தக் கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளர்ச்சி அடைந்து கொண்டு வருகிறது. சேலம் சென்டிரல் பாங்கை எடுத்துக்கொண்டால் ஒன்பது லட்சம், பத்து லட்சம் நிகர லாபம் வந்திருக்கிறது என்ருல் அதைப் பலர் நம்பக்கூட மறுக்கிருர்கள். இதற்குக் காரணம் கவனிக்க வேண்டும். ஒருவர் கூட்டுறவு ஸ்தாபனங்கள் பலவற்றில் இருக்கக் கூடாது என்று செய்வது சரியல்ல. ஒருவர் பலவிடங்களில் இருப்பதஞல் தான் ஒன்றுக்கொன்று இணைந்து நல்ல முறையில் எல்லா ஸ்தாபனங்களும் செயலாற்றக்கூடிய முறையில் காரியங்கள் நிறைவேற்றுவதற்கு வசதி ஏற்படுகிறது. சேலம் ஜில்லாவில் மட்டும் ஒரு ப்ரைமரி நெசவாளர் சங்கம் பத்து லட்சம் கடன் பெற்றிருக்கிறது என்ருல் இதற்குக் காரணம் இங்குள்ளவரே ஸ்டேட் பாங்க், சென்ட்ரல் பாங்க், ரிசர்வ் பேங்க் இங்கெல்லாம் செல்வாக்கும் பதவியும் பெற்றிருப்பதஞல்தான் நெசவாளர் சங்கங்களுடைய கஷ்டங்களை உணர்ந்து அவ்வப்போது நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. அப்படி இல்லாத காரணத்திஞல் என்ன என்ன கஷ்டங்கள் ஏற்படும் என்பதும் எங்களுக்குத் தெரியும்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன் சென்னை ராஜ்யத்தில் இருக்கக்கூடிய மாகாண நெசவாளர் கூட்டுறவு சங்கங்களை எடுத்துக் கொண்டால் மத்திய போர்டில் டைரெக்டராக இருந்தவர் இவற்றை நம்புவது கிடையாது. ஒரு சமயம் அவர் பேசும்போது "இந்தச் சங்கங்கள் தயாரிக்கக்கூடிய துணி தொட்டால் அப்படியே இற்று இற்று போகும்படியாக இருக்கிறது" என்று சொன்னர், "நீங்கள் நினைப்பது தவறு. ஏதோ ஒரு தவருன

கருத்தில் இப்படிப்பட்ட எண்ணம் வைத்திருக்கிறீர்கள். சென்னை ராஜ்ய கூட்டுறவுச் சங்கத்திற்குச் சென்று பாருங்கள். நூறுக்கு நூறு விலை போகக் கூடிய நிலைமை இருக்கிறது. அந்தச் சங்கங்களுக்குத் தாராளமாக நீங்கள் உதவி செய்ய வேண்டும்" என்று சொல்லியிருக்கிறேன். மாகாண சங்கங்களுடைய நிலைமையை உணர்வதற்குச் சந்தர்ப்பம் இல்லாததனால் அந்த மாதிரியான நிலைமை ஏற்பட்டது என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

சமீபத்தில்கூட மத்திய பாங்கில் இருந்தும் ஒரு டைரெக்டரை அனுப்பி இருக்கிறார்கள், சென்னை ராஜ்ய கூட்டுறவு சங்கத்திற்கு. நான் பெயர் சொல்ல விரும்ப வில்லை. அவர் பல கோடிக்கணக்கான ரூபாய்கள் விரயமாவதாக அபிப்பிராயம் கொண்டிருந்தார். ஒரு நபர் இங்கும் அங்கும் இல்லாதிருப்பதனால் ஏற்படுகிற கஷ்டம் இது. ஆகவே ஒரு நபர் ஒன்றுக்கு மேற்பட்ட ஸ்தாபனங்களில் இருக்கக் கூடாது என்று செய்வது சரியல்ல என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

ஆடிட்டர்களைப் பற்றிக் கூறினார்கள். இலாகா ஆடிட் பற்றியும் தெரிவித்தார்கள். போதிய ஆடிடர்கள் இல்லை, ஒப்புக்கொள்கிறேன். நிறையப் பேர்கள் போடவேண்டும் என்றும் ஒத்துக் கொள்கிறேன். இலாகா ஆடிடர்கள் என்று இருப்பதனால் தான் நுணுக்கமாக இப்போது பரிசீலனை செய்கிறார்கள். கம்பெனி ஆடிடர்களைப் போல பாலன் ஷீட்டைப் பார்ப்பதில்லை. ஆனால் ஆடிட்டுக்காகப் பணம் வசூலிக்கிறார்கள். இதுதான் வெள்ளானையைக் கட்டித் தீனி போட வேண்டிய நிலைமையாக இருக்கிறதே தவிர இப்போதுள்ள ஆடிட் முறைதான் சரியானது என்று ஒப்புக் கொள்கிறேன்.

அதோடு கூட்டுறவு இயக்கத்தில் எங்கள் ஜில்லாவை எடுத்துக் கொண்டால் பல பேர்கள் ஆர்வத்தோடு பணியாற்றி வருகிறார்கள். ஒன்றிரண்டு இடங்களில் தவறு நடக்கலாம். அதற்காகப் பரவலான முறையில் நிர்ப்பந்தமோ, குற்றச்சாட்டோ இருக்குமானால் பொறுப்புள்ளவர்கள், கண்ணியமானவர்கள் இந்தத் தாறுமாறான பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்காது விலகிப் போகத்தான் நினைப்பார்கள். சேவா மனப்பான்மை உள்ளவர்கள் கிடைப்பது அரிதாகிவிடும். பல உதாரணங்கள் சொல்ல முடியும். நீண்ட நேரம் ஆகிவிட்டதால் அதைப் பற்றிச் சொல்லவில்லை. அங்கங்கே சிறுசிறு ஊழல்கள் ஏற்பட்டாலும் அதைக் களைந்தெறிய வேண்டும் என்பதை ஒத்துக் கொள்கிறேன். திரு. கோவிந்தசாமி அவர்கள் கூடச் சொன்னார்கள். நன்றாக யோசித்துப் பார்க்கட்டும். அவர்கள் சொல்வதை ஆட்சேபிக்கவில்லை.

நெசவாளர் சங்கங்களில் நெசவாளர்கள்தான் இருக்கவேண்டுமென்றிருக்கிறது. நெசவாளர்கள் அல்லாத சில பேர்களும் நெசவாளர் சங்கங்களில் இருக்க வேண்டுமென்று இருந்தால் அவைகளை நல்ல முறையில் நடத்துவதற்குள்ள சந்தர்ப்பம் ஏற்படும். சமீபத்தில் சேலத்தில் மிகப் பெரிய சங்கம் ஒன்று, இந்த தேசத்திலேயே முதன்மையாக ஆரம்பிக்கப்பட்ட சங்கம்—அங்கு அந்த மகாசபையில் 146 பிரேரணைகள் செய்யப்பட்டு மூன்று மகாசபை கூடியும் அவைகளைத் தீர்க்க முடியாத நிலைதான் ஏற்பட்டது. ஆகவே, நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களில் நெசவாளர்கள் அல்லாதவர்களையும், அவர்கள் நலனில் அக்கறை கொண்டவர்கள் சிலரையும் அங்கு இருப்பதற்கு இடமிருக்க வேண்டும். கூட்டுறவு நெசவாளர்கள் சங்கத்தில் 50 சதவிகிதம் போனஸ் கொடுக்க சட்டத்திலேயே இடம் இருக்க வேண்டும். ரிசர்வ் பண்ட் 25 சதவிகிதம் என்று ஏற்படுத்த வேண்டும். நெசவாளர் சங்கங்களைப் பொறுத்தவரையில் அவர்களுக்கு நிறைய போனஸ் கொடுக்க வாய்ப்பிருந்ததால்தான் அவர்கள் நல்ல முறையில் சங்கத்தை நடத்த முடியும். அப்பொழுதுதான் நெசவாளர்கள் வெளியிலிருந்து வாழமுடியும். கூட்டுறவு நெசவாளர் சங்கத்தை எடுத்துக் கொண்டால் அரிஜனங்களுக்குக் கொடுக்கப்படுகிற உதவிபோல் இவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது. பின் கூட்டுறவு அர்பன் பாங்க் பத்து வருடத்திற்கு வீட்டின் பேரில் கடன் கொடுக்க ஏற்பாடு இருந்தது. அது மூன்று

30th March 1961] [Sri A. Mariappan]

வருடங்கள் என்று செய்யப்பட்டிருக்கிறது. கிராம மக்களுக்கு, நகரங்களில் இருப்பது போன்ற சௌகரியங்கள் செய்து கொடுக்க வேண்டுமென்ற முறையில் இதைப் பத்து வருடங்கள் என்று மாற்ற ஏற்பாடு செய்யுமாறு கோருகிறேன். (மணியடிக்கப்பட்டது). அடுத்தபடியாக, பெண்கள் ஜாமீன் போடுவதுபற்றி. அம்மாப்பேட்டையில் ஒரு அர்பன் பாங்கு இருக்கிறது. அதில் 2,000 மெம்பர்கள் இருக்கிறார்கள். அதில் 1,500 பேர் பெண்கள். ஆகவே, பெண்கள் ஜாமீன் போடக் கூடாதென்றால் அங்கு ஜாமீனுக்கு ஆள் தேட வேண்டியிருக்கிறது. நல்ல முறையில் கடன் வாங்க முடியாத நிலைதான் இங்கிருக்கிறது. ஆகவே, பெண்களும் ஜாமின் போட ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு சிலர் பல சொஸைடிகளில் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அதைப் பற்றி பரிசீலனை செய்து அப்படி ஒருவரே பலவிடங்களில் இருப்பதால் வேலைகள் நன்கு நடைபெறுகிறதா இல்லையா என்று பரிசீலனை செய்து கொள்ளலாம் என்று சொல்லி கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**SRI K. S. SUBRAMANIA GOUNDER** : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, கூட்டுறவு அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவை நான் ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் சொல்லியது போல் இந்தச் சட்டம் 1932-ல் இயற்றப்பட்டு அதற்குப் பிறகு திருத்தங்கள் எவ்வளவு வந்திருக்கின்றன, என்று பார்த்தால் மிகச் சொற்ப திருத்தங்கள்தான் கூட்டுறவு இயக்கச் சட்டம் பொறுத்த வரையில் வந்திருக்கும். ஏன் அதிகப்படி திருத்தம் வரவில்லையென்றால் திருத்தம் செய்வதற்கு ஒன்றுமில்லையா என்று பார்த்தால் பல நாட்களுக்கு முன்னதாகவே பல முக்கிய அம்சங்களைத் திருத்தியிருக்கவேண்டும். கனம் அமைச்சர் அவர்கள் சொல்லியதுபோல் பல காரணங்களால் அதை ஒத்தி வைத்து விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். இந்தச் சட்டத்தை முழுமையாக புதுப்பிக்கக்கூடிய முறையில் ஒரு பூர்வாங்கச் சட்டமாகக் கொண்டு வந்திருப்பதை நான் ஆதரிக்கிறேன். மற்ற ராஜ்யங்களிலுள்ள கூட்டுறவு சட்டங்களும், நமது ராஜ்யச் சட்டமும் எப்படியிருந்தன, இப்பொழுது இருக்கக்கூடிய சட்டம் எப்படியிருக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும், அது பற்றி ஆராயவும் வேண்டும். லாக் கமிட்டியார் ஒரு சட்டத்தை மாதிரிச் சட்டமாகக் கொடுத்துள்ளார்கள். லாக் கமிட்டியார் கொடுத்திருப்பது, அதை எந்த அடிப்படையில் கொடுத்திருக்கிறார்கள் என்பதையும் நாம் சற்று ஆராய வேண்டும். லாக் கமிட்டியார் கொடுத்த சட்டத்தைத் தெரிந்து கொண்ட வகையில் நமது தமிழ்நாடு சட்டத்தையும், பழைய பம்பாய் ராஜ்யச் சட்டத்தையும் இணைத்துத்தான் லாக் கமிட்டியாரின் சிபார்சு கொடுக்கப்பட்டிருக்கிறது என்று நான் சொன்னால் அது மிகையில்லை என்பதை கனம் அமைச்சர் அவர்களே ஒப்புக்கொள்வார் என்பதில் சந்தேகமில்லை. லாக் கமிட்டியார் சென்னைச் சட்டத்தில் அதிகமாகத் திருத்தம் செய்வதற்கு விரும்பவில்லை என்பதையும் நாம் சற்று ஆராயக் கடமைப் பட்டிருக்கிறோம். நம் நாட்டில் கோவாப்பரேட்டிவ் அல்லது கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளர்ந்திருக்கிறது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வர். நம் ராஜ்யத்தில் கூட்டுறவு இயக்கம் சரியாக வளரவில்லை என்று சொல்லக் கூடியவர்களும் அதை ஒப்புக்கொண்டு தானாகவேண்டும். ஏனெனில் புள்ளிவிவரங்கள் அவ்வாறு இருக்கின்றன. அதே சமயத்தில் நமது சட்டத்தைத் திருத்த வேண்டிய தேவையே இல்லையா என்றால் அவசியம் திருத்தம் செய்ய வேண்டிய பல அம்சங்களை நானே ரெஜிஸ்டாருக்கும், அரசாங்கத்திற்கும் கூட குறிப்பிட்டிருக்கிறேன். ஆக, இப்பொழுது செய்திருக்கக்கூடிய திருத்தங்கள் எல்லாம் எந்த அடிப்படையில் செய்யப்பட்டிருக்கின்றன என்று நாம் சற்று ஆராய வேண்டும். கூட்டுறவு இயக்கம் என்றால் அரசாங்கம் மட்டும் கூட்டுறவு இயக்கம் அல்லவேயல்ல. கூட்டுறவு இலாகா மட்டும் கூட்டுறவு இயக்கம் அல்லவேயல்ல. அம்மாதிரி, அரசாங்கமும், ரெஜிஸ்டார் அவர்களும்தான் கூட்டுறவு இயக்கம் என்று நினைப்பார்களேயானால் கூட்டுறவு இயக்கம் அழிந்து விடுவதற்கு இது ஒரு அறிகுறி. நமது நாட்டின் ஒப்பற்ற பிரதமர் அவர்கள்கூட அடிக்கடி சொல்லி வருகிறார்கள், கூட்டுறவு இயக்கத்தில் அரசாங்கத் தலை

[Sri K. S. Subramania Gounder] [30th March 1961

யீடு இருக்கவே கூடாது, அரசாங்கத் தலையீடு எதில் அதிகமாக இருக்கிறதோ அது கூட்டுறவு இயக்கமே அல்ல என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆனால் நம் ராஜ்யத்தில் அரசாங்கத் தலையீடு இதுவரை அதிகமாயிருந்தது என்று நான் சொல்ல வரவில்லை. அரசாங்கத்தின் கண்காணிப்பு அவசியம் வேண்டும். இன்னும் கண்காணிப்பு இதைவிட அதிகமாக வேண்டும். ஆடிட் இன்னும் திறமையாக செயல்பட வேண்டுமென்று நினைக்கக்கூடியவர்களில் நானும் ஒருவன். அதைப்பற்றி இரண்டு வித அபிப்பிராயங்கள் இருக்க முடியாது. ஆனால், இப்பொழுதுள்ள பல அம்சங்களில், கூட்டுறவு இயக்கச் சட்டத்திலே அடிப்படையான சில மாறுதல்களைச் செய்திருப்பது சற்றும் பொருந்தாது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். முதலில் ஸ்டேட் பார்ட்னர்ஷிப்பில் இந்தக் கூட்டுறவு இயக்கம் வந்தது. கூட்டுறவு இயக்கத்தில் அரசாங்கத்தின் பங்கீடு வரும்போது அது எந்த நிலையில் போய் நிற்கும் என்பதைப்பற்றி பரவலாக ஆராயப்பட்டு பேசப்பட்டது. ஆனால் அதற்குப் பிறகு அரசாங்கம் ஒப்புக் கொண்டு கூட்டுறவு இயக்கத்தில் அரசாங்கப் பங்கீடு இருந்தாலும் அரசாங்கம் அதன் நிர்வாகத்தில் தலையிடாது என்றமாதிரி எல்லாம் பலவற்றை அரசாங்கம் ஒப்புக்கொண்டது. பாட்னா கான்பரன்ஸில் இதை வலியுறுத்தும் தீர்மானங்கள் செய்யப்பட்டது. அரசாங்கமும் அதை ஒப்புக்கொண்டார்கள். ஆனால் இப்பொழுது கூட்டுறவு புதுச் சட்டம் என்ற பெயரால் பாட்னா தீர்மானத்தை, அரசாங்கம் இதுவரை எதை எதை ஒப்புக்கொண்டார்களோ அதையெல்லாம் பூர்ணமாக கை விட்டு விட்டார்கள் என்று கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அது ஒருபுறமிருக்க, இந்தச் சட்டம் வருவதற்கு முன்னரே கூட்டுறவு இயக்கத்தில் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்பதுகுறித்து கனம் அமைச்சர் அவர்கள் கூட்டுறவு இயக்கத்தில் உள்ளவர்களைக் கலந்து ஆலோசனை செய்து இந்தச் சட்டத்தைக்கொண்டு வந்திருப்பார்களானால் நான் அதை வரவேற்பேன். கனம் அமைச்சர் அவர்களையும் பாராட்டியிருப்பேன். ஆனால் கூட்டுறவாளர்களைப் புறக்கணித்து கனம் அமைச்சர் அவர்களும் அல்லது அரசாங்கமும் டிப்பார்டுமென்டார் மட்டும் ஆலோசனை செய்து இச்சட்டத்தைக் கொண்டு வந்தது கனம் அமைச்சர் அவர்களுக்கு கூட்டுறவாளர்களிடம் நம்பிக்கையில்லாத அளவில்தான் செய்திருக்கிறார்கள், என்பதை நினைக்கும்போது உண்மையிலேயே வருந்த வேண்டியிருக்கிறது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இன்று 25 கோடி கூட்டுறவு இயக்கத்தில் இருந்து கொடுக்கப்பட்டிருக்கிறது என்று அரசாங்கம் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறார்கள், கனம் அமைச்சர் அவர்களும் சொல்லிக் கொள்கிறார்கள். அதற்காக கனம் அமைச்சர் அவர்களை நான் பாராட்டுகிறேன். 25 கோடி அளவிற்கு கொடுக்கப்பட்டிருப்பது மட்டுமல்ல, கொடுக்கப்பட்ட பணம் பூர்ணமாக நல்ல முறையில் வசூலிக்கப்படுகிறது என்பதையும் கனம் அமைச்சர் அவர்கள் மறந்துவிட முடியாது. இதையெல்லாம் யார் செய்கிறார்கள், அரசாங்கம் செய்கிறதா அல்லது ரெஜிஸ்டார் அவர்கள் செய்கிறார்களா, ரெஜிஸ்ட்ராருக்கு இதில் ஒரு அணுவாவது பங்குண்டா என்று பார்க்கும்போது ரெஜிஸ்ட்ராருககும் இதற்கும் சம்பந்தமே கிடையாது. அரசாங்கத்திற்கும் இதற்கும் சம்பந்தமே கிடையாது. அரசாங்கம் காரண்டி கொடுப்பது தவிர சென்ட்ரல் பாங்க்ஸ்-க்கு அரசாங்கம் ஷெயர் காப்பிட்டல் வாங்கிக் கொடுப்பது தவிர அரசாங்கப் பங்கீடு இதில் ஒன்றுமில்லை. செய்திருப்பதெல்லாம், உத்தியோகப்பற்றற்ற கூட்டுறவாளர்கள், கூட்டுறவு மத்திய பாங்க்ஸ், சென்னை ராஜ்ய கூட்டுறவு சொஸைடி, பிரதம நாணய சங்கங்கள் இவைகள்தான் என்பதை நாம் மறந்துவிட முடியாது. எதற்கு இதைச் சொல்லுகிறேன் என்றால், அரசாங்கம் 25 கோடி ரூபாய் கொடுத்துவிட வேண்டும் என்று டார்ஜெட் போட்டு விடுகிறார்கள். முதலாவது இதைப் பெறுவதற்கு ஒவ்வொரு ஜில்லா ரெஜிஸ்ட்ராரும் காரியங்களை நடத்தி விடுகிறார்கள். அதன் பின்னால் கூட்டுறவாளர்களால் தான் காரியங்கள் எல்லாம் நடைபெறுகின்றன. இந்த நிலையில் இம்மாதிரிப்பட்ட திருத்தங்களைக் கொண்டு வரும்போது ஏன் கூட்டுறவாளர்களைக் கலந்து ஆலோசித்திருக்கக் கூடாது என்று தெரியவில்லை. அரசாங்கம் ஏன் இவ்விதம் விட்டுவிட்டார்கள் என்று தெரியவில்லை. அரசாங்கத்தினுடைய எந்த காரியத்தில் கூட்டுறவாளர்கள் உதவி செய்யாமல் விட்டு விட்டார்கள் ? எல்லாவற்றிலுமே பூரண ஒத்துழைப்பு கொடுத்திருக்கிறார்கள்

12–30 p.m.

30th March 1961] [Sri K. S. Subramania Gounder]

என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். மெம்பர்ஷிப் சேர்க்கின்ற விஷயத்திலும் சில திருத்தங்களை இச்சட்டத்தில் கொண்டுவந்திருப்பதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். முன்னால் கூட்டுறவு சம்பந்தப்பட்ட ரூல்களில் எல்லாம் இதற்குப் போதிய வழிவகைகள் இருக்கின்றன. இதை இப்போது சட்டத்திலேயே கொண்டு வந்திருக்கிறோம். அவ்வளவு தான் வித்தியாசம். ஆனால் இப்போது கூட்டுறவு இயக்கத்தில் மெம்பர்களாகச் சேருவதற்குக் கஷ்டங்கள் இருக்கின்றன என்று யாராவது சொல்லுவார்களேயானால் உண்மையிலேயே அவர்கள் நேரடியாக விஷயத்தைத் தெரிந்து கொள்ளாமல் தான் சொல்லுகிறார்கள் என்று நான் சொல்ல முடியும். கூட்டுறவு இயக்கத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குள் எத்தனை மெம்பர்கள் சேர்க்க வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறார்களோ, அதை இரண்டாவது ஐந்தாண்டுத்திட்ட காலத்திற்குள்ளேயே நாம் செய்து முடித்திருக்கிறோம். உதாரணமாக ஒரு ஜில்லாவில், எந்த ஜில்லா என்று நான் சொல்ல விரும்பவில்லை, அங்கு மெம்பர்ஷிப் வாரத்தில் ஒரே ஜில்லாவில் 65 ஆயிரம் பேர்கள் சேர்ந்திருக்கிறார்கள் என்றால் நிச்சயமாக இது டிபார்டுமெண்டால் செய்யக் கூடியகாரியமே அல்ல, உத்தியோகப்பற்றற்றவர்களால் தான் முடியும் என்பதை நம்மால் உறுதியாகச் சொல்ல முடியும். அப்படியிருக்கும்போது,இம்மாதிரி ஒரு பேச்சு,அஸ்ஸாம் ராஜ்யத்திலோ, மத்திய பிரதேசத்திலோ, மேற்கு வங்காளத்திலோ இருந்தது என்று சொன்னால் இம்மாதிரி சொல்லுவதற்குரிய இடம் இருந்திருக்கவே முடியாது. சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரை இம்மாதிரி நல்ல முறையில் மெம்பர்கள் சேர்க்கப்படுவதில்லை என்று சொல்வது, நமது ராஜ்யத்தில் எந்த அளவுக்குக் காரியங்கள் நடைபெறுகின்றன, எந்த அளவுக்குக் காரியங்கள் செயல்படுகின்றன என்பதைத் தெரிந்துகொள்ளாமல் சொல்லப்படுவது தான் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது இருக்கக்கூடிய சட்டத்தில் பல அம்சங்கள் இருக்கின்றன. "ஃபஸ்ட் சார்ஜ்" செய்யக்கூடிய அம்சங்கள் இருக்கின்றன. அவ்விதம் இல்லை என்றும் சொல்லப்பட்டது. செக்ஷன் 13-ஐ எடுத்துக் கொண்டால் இது நன்றாக விளங்கும். நான் எல்லாவற்றையும் விரிவாகச் சொல்ல விரும்பவில்லை. ஒன்றிரண்டை மட்டும் குறிப்பாகச் சொல்ல விரும்புகிறேன். ரெஜிஸ்டிரார் அவர்களுக்கு ஒரு ஆர்பிட்டரி பவர் கொடுத்திருக்கிறார்கள். மகாசபை இஷ்டப்பட்டாலும், இஷ்டப்படாவிட்டாலும் எந்த பைலாவை வேண்டுமானாலும் திருத்தி விடலாம் என்று போடப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் இதுவரை கூட்டுறவு இயக்கத்திலே இல்லாத புதிய அம்சங்கள். இதற்கு பைலா என்றே சொல்ல வேண்டிய தேவையில்லை. அரசாங்க உத்தரவே பைலா என்று போட்டுவிட்டால் எனக்கு இதில் ஆட்சேபணை ஒன்றும் இல்லை. கூட்டுறவு இயக்கத்திற்கு, "ஸ்டாட்டுடரி பாடி" என்ற முறையில் பல உரிமைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ரெஜிஸ்டிரார் செய்து கொள்வதை மகாசபை ஒத்துக்கொண்டாலும் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் சென்ட்ரல் பாங்கைக் கலந்து கொண்டு செய்துவிடலாம் என்று போட்டிருக்கின்ற அம்சமானது இதுவரை கூட்டுறவு இயக்கமே கண்டறியாத வகையில் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இம்மாதிரி செய்வது கூட்டுறவு வளர்ச்சிக்கே பொருந்தாது என்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள், சில சங்கங்களில், அதிலுள்ள மெம்பர்கள் சில சர்வீஸ்களைக் கேட்கிறார்கள். அவ்விதம் கேட்பதை சொசைட்டி செய்து கொடுக்க மறுத்துவிட்டால் அப்பீல் செய்து கொள்வதற்கு இதில் 19-வது ஷெக்ஷன் பிரகாரம் வழிவகை செய்யப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். இதில் போட்டிருப்பது எந்தெந்த சங்கங்களுக்குப் பொருந்தும் என்பதுதான் தெரியவில்லை. எல்லாச் சங்கங்களுக்கும் பொருந்தும் என்று அரசாங்கம் நினைத்திருந்தாலும், அல்லது கூட்டுறவு இலாகா நினைத்திருந்தாலும், நமக்குப் பணம் வரக்கூடியது ரிசர்வ் பாங்கிலிருந்து என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. சாதாரணமாக இந்த ஷரத்துக்களை எல்லாம் பார்க்கும்போது, நமக்கு ரிசர்வ் பாங்கிலிருந்து இல்லாவிடாலும் வேறு பல இலாகாக்களிடமிருந்து பணம் வாங்கிக் கொடுத்து நிறையப் பணம் இருப்பதாகவும், அதைச் செலவழிக்க

[Sri K. S. Subramania Gounder] [30th March 1961

முடியாமல் இருப்பது போலவும் நினைக்கத்தக்க அளவில் இருக்கிறது. சாதாரணமாகப் பணம் கொடுப்பது என்பது சுலபமாகக் கொடுத்துவிடலாம். இதேசமயத்தில் இப்போது அரசாங்கம் நினைப்பதற்கு மேலாகக் கொடுத் திருக்கிறது கூட்டுறவு இயக்கம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. 22½ கோடி முதல் 25 கோடி வரை கொடுத்திருக்கிறோம். ஆனால் இம்மாதிரி சில சங்கங்களில் தவறுகள் நடக்கின்றன என்கிற காரணத்தை வைத்துக்கொண்டு எல்லா டெம்பரரி சங்கங்களையும் சூப்பர்விஷன் செய்வது என்கின்ற நோக்கத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதேசமயத்தில் எல்லாவற்றுக்கும் அப்பீல் என்று சொல்லுவதும் உசிதமாக இருக்காது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். சாதாரணமாக "ஸீஸனல் அக்ரிகல்சர் ஆப்ரேஷன்" சமயத்தில் ரிசர்வ் பாங்க் பணம் கொடுக்கிறது. இவ்வாறு பணம் கொடுப்பதில் மற்ற ராஜ்யங்களுக்கும் நம் ராஜ்யத்திற்கும் வித்தியாசம் இருக்கிறது. உத்திரப் பிரதேசத்தை எடுத்துக் கொண்டால், ஸீஸனல் அக்ரிகல்சர் ஆப்ரேஷனுக்குப் பணம் கொடுக்கும்போது, அரசாங்கத்தினுடைய காரண்டியை வாங்கிக் கொண்டு பணம் கொடுக்கிறார்கள். நம்முடைய ராஜ்யத்தில் அரசாங் கத்தின் காரண்டியை வாங்காமலேயே சென்ட்ரல் பாங்கைக் கேட்டுக் கொண்டு பணம் கொடுக்கிறார்கள். அதேசமயத்திம் ராஜ்ய கூட்டுறவு பாங்கும் சிபாரிசு செய்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இது வெறும் சிபாரிசுதானே ஒழிய காரண்டி அல்ல. வேறு ஒரு ராஜ்யத்தில், அந்த ராஜ்யத்தின் பெயரை நான் குறிப்பிட விரும்பவில்லை, மிகவும் சக்தி வாய்ந்த ராஜ்யத்தில் பணம் கொடுப்பதற்காக அரசாங்கம் காரண்டி கொடுத்தும் ரிசர்வ் பாங்க் பணம் கொடுக்க முடியாது என்று சொல்லியிருக்கிறது. அதேசமயத்தில் நமது ராஜ்யத்திற்குக் கொடுக்கின்ற முறையையும் பார்த்தால், ரிசர்வ் பாங்க் நான்-அபிஷியல் ஸ்தாபனங்களை நம்பித்தான் கொடுக்கிறதே தவிர, அரசாங்கம் காரண்டி கொடுப்பதை மட்டும் வைத்துக்கொண்டு ரிசர்வ் பாங்க் நேரடியாகப் பணம் கொடுத்து விடுவார்கள் என்று நினைத்தால் அது சரியல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். மிகவும் முக்கியமாக இருக்கக்கூடிய ஒரு பெரிய ராஜ்யத்தி லேயே அரசாங்கம் காரண்டி கொடுத்தும்கூட, ரிசர்வ் பாங்க் பணம் கொடுக்க முடியாது என்று சொல்லக்கூடிய நிலைமை ஏற்பட்டது. நான் இதையெல்லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால் இப்போது இருக்கக்கூடிய நிலையில் ரிஸர்வ் பாங்க் பணத்தை எதிர்பாராமல் கூட்டுறவு சங்கம் நடத்திவிடலாம் என்று நினைத்தால் அது சரியல்ல என்று எடுத்துக் காட்டுவதற்காகத்தான். செய்யக்கூடிய காரியங்கள், பொறுப்புகள் இவை களையெல்லாம் எந்த அளவில் செய்கிறோம் என்பதைப் பூர்ணமாக ஆராய்ந்து அந்த அளவிலே கூட்டுறவு இயக்கத்தில் நல்ல முறையில் காரியங்கள் செய்யப்படவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

28-வது செக்ஷனைப் பொறுத்த வரையில் பலர் குறிப்பிட்டார்கள். நான் அதைப்பற்றி இந்தச் சமயத்தில் குறிப்பிட விரும்பவில்லை என்று சொல்லி அத்துடன் நிறுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

ஏற்கெனவே சொல்லியது போல 32-வது செக்ஷனில் ஃபர்ஸ்ட் சார்ஜ் என்று போட்டிருப்பது உண்மையிலேயே வரவேற்கத் தக்க விஷயம். அதுமாத்திரமல்லாமல் ஒரு டிக்ளரேஷன் கொடுத்தாலே சொத்திலே ஒரு சார்ஜாக ஆக வேண்டும் என்று குறிப்பிட்டிருப்பது வரவேற்கத்தக்க விஷயம். இதனால் சப்ரிஜிஸ்டிரார் ஆபீஸ் போவது, பணம் செலவு ஆவது எல்லாம் ஓரளவு தவிர்க்க முடியும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

லாப வினியோகத்தைப்பற்றி 62-வது செக்ஷனிலே சில மாறுதல்கள் செய்திருக்கிறார்கள். ஆனால் அம்மாதிரி 62-வது செக்ஷனைச் செய்யும் போது புதிதாகக் கூட்டுறவு சங்கத்திற்கு ஒரு வருமான வரி இருக்கிறது என்பதை மறந்துவிட்டார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

30th March 1961] [Sri K. S. Subramania Gounder]

இப்போது இருக்கக்கூடிய அளவில், எல்லா சங்கங்களுக்கும் அல்ல, சில சங்கங்களுக்கு இன்கம் டாக்ஸ் முதல் சார்ஜாக இருக்கப் போகிறது. அடுத்தாற்போல ரிஸர்வ் ஃபண்ட் சார்ஜாக இருக்கும். அதற்கு அடுத்தாற் போல புதிதாக கல்விக்கு 5 சத விகிதம் ஒதுக்கவேண்டும் என்ற அளவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்குப் பிறகு அக்ரிகல்சுரல் க்ரெடிட் ஸ்டெபிலேஸேஷன் ஃபண்ட் இருக்கிறது, ஆடிட் ஃபண்ட் இருக்கிறது. அடுத்தபடியாக சர்க்கார் ஏதாவது புதிதாக நினைத்தால் அவைகளை ரூல்ஸிலே போட்டு விடலாம் என்று போட்டு, அதற்குப் பிறகு டிவிடெண்ட் கொடுக்கலாம் என்று இருக்கிறது. அமைச்சர் அவர்கள் இதிலே சற்று அதிகமாக சிந்தனை செலுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள் கிறேன். எவ்வளவு பெரிய சங்கமாக இருந்தாலும் சரி, இத்தனையையும் தாண்டி டிவிடெண்ட் வருமா என்று கணக்குப் போட்டுப் பார்த்தால் வரவே வராது என்று நிச்சயமாகச் சொல்லிவிட முடியும். எவ்வளவு பெரிய சங்கமாக இருந்தாலும், எவ்வளவு லாபம் வந்தாலும் அந்த சங்கம் மற்ற தனிப்பட்ட சங்கம்போல இஷ்டம்போல் டிவிடெண்ட் டிக்ளேர் செய்துவிட முடியாது. சட்டப் பிரகாரம் $6\frac{1}{4}$ சத விகிதம்தான் டிக்ளேர் செய்ய முடியும். சென்ட்ரல் பாங்க் போன்றவைகள் 5 சத விகிதம்தான் கொடுக்க முடியும். லாபம் எவ்வளவு வந்திருந்தும் 5 சத விகிதம் கூடக் கொடுக்க முடியவில்லை என்றால் அந்த சங்கத்தைப்பற்றி வெளியார் என்ன நினைப்பார்கள். அந்த சங்கத்தில் பங்குகொள்ள இஷ்டப்படுவார் களா, அதேசமயத்தில் டெபாஸிட் செய்ய முன் வருவார்களா என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். நம் அமைச்சர் அவர்கள் கம்பெனி லாவில் நிபுணர் என்று ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் கம்பெனி லா தெரிந்தவர். கம்பெனி லாவிலே ஃபர்ஸ்ட் சார்ஜ் என்ன என்று பார்க்கும்போது டிவிடெண்ட்தான் முதல் சார்ஜாக இருக்கிறது. ஆனால் இது வரையில் எத்தனையாவது சார்ஜாக இருந்தது என்றால் முதலில் ரிஸர்வ் ஃபண்ட், இரண்டாவது டிவிடெண்ட் என்று இருந்தது. ரூல் மேகிங் பவர் அரசாங்கத்திடம் இருப்பதால் அக்ரிகல்சுரல் க்ரெடிட் ஸ்டெபி லைஸேஷன் ஃபண்ட், ஆடிட் ஃபண்ட் என்று போட்டார்கள். வெளிப் படையாக கூட்டுறவுக் கல்விக்கு 5 சத விகிதம் ஒதுக்க வேண்டும் என்று போட்டிருப்பது எந்த விதத்திலும் நியாயத்திற்குப் பொருந்தாது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் ரிசர்வ் பாங்கியிலிருந்து பணம் அதிகமாக வர முயற்சிக்காமல் சங்கங்களெல்லாம் அவர்கள் சக்தியை அனுசரித்து அவர்களாக டெபாஸிட் சேர்த்துக் கொள்ள வேண்டும், ஷேர் காபிட்டல் வசூலிக்க வேண்டும் என்று சொல்லும் நேரத்தில், இவைகளினாலெல்லாம் டிவிடெண்ட் அதிக மாக வர மார்க்கம் இல்லை என்று இருக்குமானால், கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சிக்குச் சற்றும் பொருந்தாத நிலை ஏற்பட்டு விடும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மற்றொன்று சொல்லலாம், நாங்கள் அரசாங்கத்திலிருந்தும் ஷேர் காபி டல் கொடுக்கிறோம் என்று. அரசாங்கத்திலிருந்து ஷேர் காபிடல் கொடுக் கும்போது எவ்வளவு வெளியாரிடமிருந்து ஷேர் காபிடல் வசூலிக் கிறோமோ அந்த அளவுதான் மாட்சிங் ஷேர் காபிடல் கொடுக்கிறார்களே தவிர, எவ்வளவு வேண்டுமானாலும் ஷேர் காபிடல் கொடுத்து விடுவது இல்லை. அந்த அம்சத்தைப் பொறுத்தவரையில் நம் ராஜ்ய சங்கங்கள் மிகவும் பாதிக்கப்பட்டுவிடும் என்று வலியுறுத்திச் சொல்ல விரும்பு கிறேன்.

ஆடிட் பொறுத்த வரையில் பலர் குறிப்பிட்டார்கள். என்னுடைய அபிப்பிராயம் எந்த அளவிற்கு ஆடிட் திறமையாக இருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் சங்கங்களின் நிர்வாகம் நன்றாக இருக்க முடியும் என்று பூர்ணமாக ஒப்புக்கொள்கிறேன். இருந்தபோதிலும் இப்போது ஆடிட் என்ன நிலைமையில் இருக்கிறது, இந்த சட்டத்தில் அதிகமாக திருத்தம் செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் எந்த அளவுக்குச் செய்ய வேண்டுமோ அந்த அளவுக்குச் செய்யப்பட வில்லை என்று வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். செக்ஷன் 28-ஐத் திருத்துவதன

காரணமாக சங்கங்கள் நல்ல முறையில் வந்து விடவே முடியாது. ஆனால் ஆடிட் செக்ஷனைத் திருத்துவது மூலமாக சங்கங்களில் தவறுதல் இல்லாமல், நடக்க முடியாமல் இருக்கக்கூடிய முறையில், அப்படி தவறு நடந்தாலும் அடுத்த நிமிஷம் தவறு என்ன என்று கண்டுபிடிக்கக் கூடிய முறையில் ஆடிட் இருந்தாலொழிய, என்ன ஏற்பாடு செய்தாலும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எந்த அளவு கூட்டுறவு இயக்கம் வளர வேண்டுமென்று நினைக்கிறோமோ, அந்த அளவுக்கு வளரும்போது இப்போது இருப்பதைவிட தவறுகள் அதிகமாக ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. தவறுதலே எந்த இயக்கத்திலும் இருக்க முடியாது என்று சொல்லுபவன் நான் அல்ல. தவறு என்று செய்யும்போது யார் செய்கிறார்கள் என்பதையும் மறந்துவிட முடியாது. ஒரு சங்கத்தில் ஒரு தவறுதல் ஏற்பட்டு விட்டால் சங்க நிர்வாகஸ்தர் பொறுப்பாளியாக இருக்கலாம், அல்லது சிப்பந்திகள் பொறுப்பாளியாக இருக்கலாம். சில இடங்களில் யார் பொறுப்பாளியாக இருந்தாலும், அப்போதைக்கப்போது என்ன தவறுகள் இருக்கின்றன என்று கண்டுபிடிப்பதாய் இருந்தால், ஆடிட் செய்பவர்கள் விஜிலெண்டாக இருக்கிறார்கள் என்றால் தவறு செய்கிறவர்கள் கூட தவறு செய்யக்கூடிய சூழ்நிலை இருக்காது. கன்கரண்ட் ஆடிட் எல்லா ஸ்தாபனங்களுக்கும் வரும் அளவில் ஏற்பாடு செய்யாவிட்டால் கூட்டுறவு இயக்கம் நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் மேலும் ஓங்க மார்க்கம் இல்லை என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். இன்னும் அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய வேண்டுமென்றுகூட யோசிக்க வேண்டும். அது மட்டுமல்லாமல் 6 கோடி ரூபாய் லேவாதேவி இருந்த காலத்தில் ஆடிட்டிற்கு எவ்வளவு ஆட்கள் வைத்திருந்தார்களோ, எவ்வளவு செலவு செய்தார்களோ, இப்போது 25 கோடி ரூபாய் இருக்கும்போதும் அதே அளவு செலவு செய்கிறார்கள். ஆடிட் விஷயத்தில் ரூபாய் அணா பை கணக்குப் பார்ப்பதால் தான் ஊழல்கள் இருக்கின்றன. அரசாங்கம் ஆடிட்டிற்குச் செலவு செய்வதில் செலவு முக்கியமல்ல என்று அமைச்சருக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு ஆடிட்டர் 12, 14 சங்கங்களை ஆடிட் செய்வதை இரண்டு நாட்களில் முடிக்க வேண்டும் என்று சொன்னால், முன்பு 5,000 ரூபாய் இருந்தது, இப்போது 20,000 அல்லது 50,000 ரூபாய் என்று இருக்கும்போது 2—3 நாட்களில் எவ்வாறு முடியும் என்று கேட்கிறேன். ஏதோ ஒரு பாலன்ஸ் ஷீட் போட்டு, பாலன்ஸ் ஷீட் டாலியானால் போதும் என்ற முறையில் ட்ரயல் பாலன்ஸ் எடுத்து பாலன்ஸ் ஷீட் போட்டு ஆடிட் செய்கிறார்கள். இதற்குக் காரணம் வேறு யாரும் அல்ல. எந்த அளவுக்குத் தேவையான ஆட்கள் இருக்கிறார்கள் என்று பரிசீலனை செய்யாததுதான் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அப்படி வருஷத்திலே பணம் எவ்வளவு வருகிறது போகிறது என்று பார்க்காமல் நல்ல தணிக்கை இருக்க வேண்டும். நல்ல தணிக்கை இருக்க அரசாங்கம் என்ன காரியம் செய்ய வேண்டுமென்று ஆராய்ந்து வேண்டியதைச் செய்வதிலே, என்னைக் கேட்டால் இந்த மசோதா சட்டமாகும் வரை காத்திராமல் உடனடியாகச் செய்தால் இன்னும் அதிகமாக வரவேற்பேன். சட்டம் பாஸ் ஆகும் காலம் வரையில் இதற்காகக் காத்திருக்க வேண்டியதில்லை—இது உடனடியாகச் செய்யவேண்டிய விஷயம்.

இன்னும் ஒரே ஒரு வார்த்தையைச் சொல்லி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன். கோவாப்பரேட்டிவ் டிரிப்யூனல் ஏற்படுத்துவதைப் பற்றி இதிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. கோவாப்பரேட்டிவ் டிரிப்யூனல் வேறு சில ராஜ்ய சட்டங்களில் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அது சவுகரியமாக காரியம் நடைபெற உதவுமா ? அதனால் காரியம் தாமதப்பட்டு, நாம் என்ன காரியத்திற்காக ஏற்படுத்தினோமோ, அதற்கு நேர்மாறாகப் போகுமா என்பதை யெல்லாம் நாம் யோசிக்க வேண்டும். நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் கோவாபரேடிவ் டிரிபியூனல் ஒன்று ஏற்படுத்துவதற்கு எந்தவிதமான நிர்ப்பந்தமோ அவசியமோ இல்லை யென்பதை தெரிவித்துக் கொள்கிறேன். ஏதோ சிலர் சொல்லியதைப்போல் குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கு, குற்றங்களை விசாரிப்பதற்கு அந்த டிரிப்யூனல் இல்லவே இல்லை. சில ஜட்ஜ்மெண்ட் எழுதும்போது அதற்குமேல் ஒரு அப்பீல் செய்வதற்காகத்தான் டிரிபி

30th March 1961] [Sri K. S. Subramania Gounder]

யூனல் வைக்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக, இப்போது சில முடிவுகளை ரிஜிஸ்திரார் எடுக்கும்போது, சாதாரணமாக நூற்றுக்கு நூறு சட்டங்களை மாத்திரம் பார்த்து ஒரு முடிவு செய்வதில்லை. அதேசமயத்தில் காரியங்கள் நடப்பது கூட்டுறவு இயக்கத்திற்கு, கூட்டுறவு சங்கத்திற்கு பாதகமில்லாமல் முடிவில் தகுதியைக் கொண்டு முடிவெடுக்கப்படுகிறது. ஆனால் அதற்குமேல் டிரிபியூனல் ஒன்று வைப்போமானால் அந்த ரிஜிஸ்திரார் உத்திரவுக்குமேல் முடிவு செய்யும் காலத்திலே அவருடைய முடிவு சட்டபூர்வமான முடிவாகத்தான் இருக்க முடியுமே தவிர, சங்கத்தின் தகுதியைக் கொண்டு செய்யக்கூடிய முடிவாக அது இருக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அம்மாதிரி ரெவின்யூ ரிகவரி சம்மரிலி டிஸ்போஸலாக சட்டங்கள் இருக்கிறது. ஆனால் இதற்கு கூட்டுறவு இயக்கத்திலே அக்கறை கொண்டு யாராவது சொல்வார்களானால், நேரடியாக நடப்பதற்கும், அதனால் சீக்கிரமாக ஒரு முடிவு காண்பதற்கும் இது எந்தவிதத்திலே உதவி புரிந்தது என்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இன்னும் அதிக நேரம் வீணாக்க விரும்பவில்லை. ஒருசில செக்ஷன்களைப் பொறுத்த கருத்துக்களை செலக்ட் கமிட்டியிலே என்னுடைய அபிப்பிராயமாகச் சொல்லிக் கொள்வேன் என்ற அளவிலே நான் சொன்ன கருத்துக்களையும், இன்னும் இதர அங்கத்தினர்கள் சொன்ன கருத்துக்களையும், பரவலாக ஆராய்ந்து அதோடு கோவாப்ரேடிவ் அட்வைசரி கமிட்டியையும் கூட்டி, அவர்களுடைய அபிப்பிராயத்தையும் பரவலாக கேட்டு, எல்லா முடிவுகளையும் எடுக்க வேண்டும். அது மாத்திரமல்ல. பொதுஜன அபிப்பிராயத்திற்குவிட வேண்டுமென்று கொடுக்கப்பட்டிருக்கிறது. இதிலே பொதுஜன அபிப்பிராயம் என்று தேவையில்லை. அதனால் காலத்தை வீணாக்க வேண்டி நேரிடும். செலக்ட் கமிட்டி தங்களுடைய எவிடென்ஸை எடுப்பார்கள் என்பதைத் தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* **THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்திலே இரண்டுவிதமான அபிப்பிராயங்கள் சொல்லப்பட்டன. ஒன்று, இப்போது கொண்டு வந்திருக்கிற சட்டம் நல்ல முறையில் அமைந்திருக்கிறது என்பது. மற்றொன்று, இப்போது இருக்கிற சட்டத்திலிருந்து செய்கின்ற மாறுதல்கள் எல்லாம் பிற்போக்கானவை என்பது. இது பரிசீலனைக் கமிட்டிக்குப் போகின்ற காரணத்தினால், இவைகளுக்குப் பதில் சொன்னால் அவைகள் சர்க்கார் கருத்தாக, சர்க்காருடைய கொள்கையாக இருக்கும் என்பதற்காக நான் ஒவ்வொன்றிற்கும் இப்போது பதில் சொல்லப் போவதில்லை. வாதங்கள் எல்லாவற்றிற்கும் பிரதிவாதங்கள் சொல்லப் போவதில்லை. எப்போதும் வாதங்கள் இருந்தால், பிரதிவாதங்கள் இல்லாமல் இருக்காது. ஆனால் அப்படி எல்லா வாதத்திற்கும் பிரதிவாதம் இப்போது சொன்னால், அது சர்க்கார் தரப்பிலே உள்ளவர்களுக்கும், மற்றவர்களுக்கும் இது சர்க்காரின் அபிப்பிராய மாகும் என்று நினைத்து, அதனால் ஏதோ சர்க்கார் வேறு முடிவுகள் எடுத்து விடும் என்று யாராவது நினைத்து கொள்ளக்கூடும் என்பதற்காகத்தான் நான் ஒவ்வொரு வாதத்திற்கும் இருக்கக்கூடிய பிரதிவாதங்களை, அதிலே இருக்கக்கூடிய தவறுகள், குறைபாடுகள் எல்லாவற்றையும் எடுத்துச் சொல்ல இப்போது முன்வரவில்லை. இந்த அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் பரிசீலனைக் கமிட்டி நன்றாக ஆராய்ந்து அது முடிவுக்கு வருமென்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அவ்வாறு சொல்கின்றபோது, இதில் சர்க்கார் எந்தவிதமான முடிவான அபிப்பிராயங்களையும் வைத்துக்கொள்ளவில்லை. பரிசீலனைக் கமிட்டி எதைச்சொல்லுகின்றதோ, அதைக் கேட்டு அதனுடைய ஒவ்வொரு நல்ல அபிப்பிராயத்தையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறது என்பதை நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். அவ்வாறே செய்யப்படும் என்பதை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

பொதுவாக சில விஷயங்களைப்பற்றி மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். கனம் அங்கத்தினர் ஸ்ரீ சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் பேசுகின்றபோது, இந்த இயக்கம் உத்தியோகப் பற்றற்றவர்களால் தான் சிறந்த

[Sri R. Venkataraman] [30th March 1961]

முறையிலே நடத்தப்படுகிறது என்று சொன்னார். இந்த இலாகாவின் மான்ய கோரிக்கையின்போது நானும் இதைத்தான் சொன்னேன். அவர்கள் சொன்ன ஒவ்வொன்றையும், நான் என்னுடைய விவாத உரையில் விளக்கிச் சொன்னேன். அதனால் உத்தியோகப் பற்றற்றவர்கள் எல்லாவற்றையும் தாங்களாகவே செய்யக்கூடிய நிலைமையை உண்டாக்கி விட முடியுமா என்பதையும் பார்க்க வேண்டும். ஒரு இயக்கம் நல்ல முறையிலே நடக்க வேண்டும், பரவலாக இருக்கவேண்டும், எல்லா மக்களுக்கும் அதிலே ஒரு நல்ல சூழ்நிலை கிடைக்க வேண்டுமென்று சொன்னால், ஓரளவு இன்றைக்கு இருக்கிற நிலையில் சர்க்காருடைய உதவி இல்லாமல் இருக்கமுடியாது. அப்படி சர்க்காருடைய குறுக்கீடு இல்லாமல் இருக்கக்கூடிய ஒருநிலைமை இருக்கவேண்டுமானால், உலகத்தில் பல மேல்நாடுகளில் உள்ளது போன்ற நிலைமை இருக்கவேண்டும். அப்போது அதிலே சர்க்காருடைய குறுக்கீடு இருக்காது. அது எப்படி யென்று சொன்னால், அதிலே சர்க்காருடைய ஷேர் டிபாசிட் இல்லாமல், சர்க்காருடைய கடன் வசதிகள் எதுவுமில்லாமல், தனிப்பட்ட முறையில் தங்களுடைய டிபாசிட் மூலமாக பணத்தை வசூலித்து, அந்தப் பணத்தைக்கொண்டு செலவழித்துக்கொண்டிருப்பதானால் அதிலே சர்க்காருடைய குறுக்கீடு இருக்காது. அதற்காகத்தான் இந்தச் சட்டத்திலேகூட, "செல்ப் ரிலையன்ஸ் சொசைடி" என்று தனிப்பட்ட ஒரு கிளாசிபிகேஷன் போட்டு இருக்கிறோம். இது இந்தியாவிலே இப்போது சட்டக் கமிட்டியிலேயும் கிடையாது. வேறு எந்த சட்டத்திலும் இது கிடையாது. நாம் தான் முதன் முதலாகப் போட்டிருக்கிறோம். இந்த "செல்ப் ரிலையன்ஸ் சொசைடி" நிதி வசூல் செய்து, அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு கூட்டுறவு சங்கமாக இயங்கினால் அதிலே சர்க்காருடைய குறுக்கீடு கொஞ்சம்கூட இருக்காது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அப்படி இல்லாமல், அந்த முறையிலே அங்கத்தினர்களையும் சேர்க்காமல், நிதியும் திரட்டாமல் சர்க்கார் பங்கைப் பெற்று சர்க்காருடைய குறுக்கீடும் இருக்கக் கூடாது என்று சொன்னால், அதிலே பலசங்கடங்கள் இருக்கிறது. சர்க்காருடைய குறுக்கீடு இருக்கவே கூடாது என்று இதிலே சொல்லக்கூடிய வாதமானது பிற நாட்டிலிருக்கக்கூடிய **Premises**-ஐ மாத்திரம் அதாவது முன்னோடியாக இருக்கக் கூடிய நிலைமையை மட்டும் விட்டுவிட்டு, அதிலே இருக்கக்கூடிய ரிசல்டை மட்டும் அதாவது விளைவாக இருக்கக் கூடியதை மட்டும் கேட்பதானது முறையாகாது. ஆகவே நான் இன்றைக்கு நம்முடைய நாட்டில் ரிசர்வ் பாங்கு மூலமாக ஏராளமான தொகை எல்லா மக்களுக்கும் கொடுக்கப்படுகின்றபோது, பாகுபாடு இல்லாத முறையிலே அவை கொடுக்கப்படுகின்றதா, அனைவருக்கும் விருப்பு வெறுப்பற்ற முறையில் கொடுக்கப்படுகின்றதா என்பதை யெல்லாம் கவனிப்பதற்கு சர்க்காருடைய குறுக்கீடுகள் அவசியமாகத்தான் இருக்கிறது. அதை இல்லையென்று யாரும் மறுக்கமுடியாது. நல்ல சங்கங்கள் இருக்கிறது. எந்தவிதமான குறைப்பாடுகளும் இல்லாமல் இருக்கலாம். நாம் என்ன இந்த சட்டத்திலே செய்திருக்கிறோம் என்றால், சங்கத்திற்கு மேலும் அப்பீல் செய்யலாம் என்ற திருத்தத்தைத்தான் போட்டிருக்கிறோம். அதனால் பாதிக்கப்பட்டவர்கள்தான் சர்க்காருக்கு அப்பீல் செய்வார்கள். அதிலேதான் சர்க்கார் குறுக்கீடு செய்யும். அங்கத்தினர்கள் சேர்க்கின்ற விதத்திலும், அங்கத்தினர்கள் வசதிகள், சர்வீஸ் போன்றவைகள் ஏதாவது நல்லமுறையிலே கொடுக்கப்படாமல், ஏதாவது மக்களுக்கு அதிருப்தி ஏற்படுமானால், அந்த அதிருப்தியைப் பற்றி பரிசீலனை செய்யவும், அதற்கு வேண்டிய நிவர்த்தனைகள் செய்யப்படும் என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது. அதேபோல் சொசைடிகள் தங்களுடைய விதிகளை வைத்துக்கொள்ளும் விஷயத்திலே கூட்டுறவு முறைக்கு ஒவ்வாத முறையிலே விதிகளை வைத்துக் கொண்டு, எங்கள் விதிகளைத்தான் வைத்து நடத்த வேண்டுமென்று சொன்னால், அதற்கு ரிஜிஸ்திரார் முடிவெடுப்பதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம். அந்த விதிகளை மாற்றியமைக்க வேண்டுமென்று சொல்வதற்கோ, வேறுவகையிலே மாற்றியமைக்கவோ, ரிஜிஸ்திராருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த இயக்கம் நன்றாக, விரிவாக வளர வேண்டுமென்று சொன்னால், சர்க்காரின் குறுக்கீடு இல்லாமல் வளர்ந்து விடாது. அப்படியில்லாவிட்டால் மக்களுக்கும், கூட்டுறவாளர்களுக்கும்சண்டைஏற்பட்டுவிடும். அப்படியில்லாமல்

30th March 1961] [Sri R. Venkataraman]

ஒத்துழைப்பான முறையிலே இந்த இயக்கம் வளர்க்கப்பட வேண்டு மென்று சொன்னால், சர்க்காரின் குறுக்கீடு அவசியம் இருக்கத்தான் வேண்டும். அதனால் சர்க்காருக்கும், கூட்டுறவாளர்களுக்கும் ஏதோ விரோதமிருப்பதாக மனதிலே ஒரு எண்ணத்தை உண்டாக்கிக்கொள்ளக் கூடாது. அப்படி இல்லாமல் ஒரு கூட்டுறவு இயக்கம் இருக்குமானால், அதைக் கூட்டுறவு இயக்கமென்று சொல்ல முடியாது. ஏதோ ஒரு சிறு கிளப்பு வைத்து நடத்தக்கூடிய முறையிலேதான் அது செயல்பட முடியும்.

இன்றைக்கு இருக்கிற சர்க்கார் ஒரு க்ஷேமநல சர்க்காராக இருக்கின்ற காரணத்தினால், இன்றைக்கு அது மக்களுடைய அபிப்பிராயத்தை புரிந்துகொண்டு நடக்கின்ற காரணத்தினால் மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்ற அவசியத்தில் இருக்கின்ற காரணத்தினால் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்பதற்காக கடன் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றும், அப்படி செய்துகொடுக்கப்படும் கடன் வசதி எல்லோருக்கும் கிடைக்கக் கூடிய நிலைமையை உண்டாக்க வேண்டுமென்றும், நிலம் இல்லாதவர்களுக்கும் கடன் கொடுப்பதென்றும், அப்படிக் கொடுப்பதில் ஏற்படக்கூடிய நஷ்டத்திலே மூன்றில் இரண்டு பங்கை சர்க்கார் ஏற்றுக்கொள்வதற்கும் தயாராக இருக்கிறது. இப்படி ஒவ்வொரு துறையிலும் உதவ வேண்டுமென்று சர்க்கார் நினைக்கும்போது, சர்க்காரின் குறுக்கீடு இருக்கக் கூடாது என்று சொல்வதானது அவ்வளவு பொருத்தமாக இருக்காது. அதனால்தான் எவ்வளவு குறைவான குறுக்கீடுகள் இருக்கமுடியுமோ அதைத்தான் செய்வதற்கானவிதிகளை இப்பொழுது செய்திருக்கிறோம். அது மாத்திரமல்ல. குறைவான குறுக்கீடுகள் மாத்திரம் அல்ல. அவசியம் இல்லாத குறுக்கீடுகள் செய்யாமல் இருப்பதற்கும் வகை செய்திருக்கிறோம். அவசியமா, இல்லையா என்பதை அந்த சந்தர்ப்பத்தை ஒட்டி நாம் கவனிக்க வேண்டும். பொதுவாக விதிகள் போடப்பட்டிருக்கின்றன. அதனால் குறுக்கீடுகள் இருக்கும் என்று சொல்லுவது சரியாகாது. சந்தர்ப்பம், சூழ்நிலை, 'பாக்ட்ஸ் ஆப் தி கேஸ்' அந்த நிலையில் இருக்கக்கூடிய உண்மைகள் இவைகளை எல்லாம் வைத்துத்தான் குறுக்கீடு அவசியமா, இல்லையா என்பதை நிர்ணயம் செய்ய முடியும். இன்றைக்கு ஏதோ சர்க்கார் திடீரென்று அதிக அதிகாரத்தை இந்தச் சட்டத்தின் மூலம் ஏற்றுக்கொண்டுவிட்டால், அதனால் இந்த இயக்கத்திற்கு கஷ்டம் வந்துவிடும் என்று நினைப்பது தவறு. சர்க்கார் ஒன்றும் அதிகமான அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. நியாயமாக நடக்கக்கூடிய சொஸைட்டிகளில் குறுக்கீடுகள் மிகவும் குறைவாகத்தான் இருக்கும். ஆனால் தவறுதலாக நடக்கக்கூடிய சொஸைட்டிகளில் சர்க்கார் குறுக்கிடுவதற்குத்தான் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அம்மாதிரி அதிகாரத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ளத்தான் செய்யும். அப்படியிருந்தால்தான் உண்மையிலேயே இது மக்களுடைய சர்க்காராக இருக்க முடியும். இல்லாவிட்டால், யாருக்குக் கடன் கிடைக்கிறதோ அவர்கள் எடுத்துக் கொள்ளட்டும், யாருக்கு லாபம் கிடைக்கிறதோ அவர்கள் எடுத்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிடக்கூடிய சர்க்காராகத்தான் இருக்கமுடியும், அது மக்கள் சர்க்காராக இருக்கமுடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். 1 p.m.

சொஸைடிகளில் இருக்கக்கூடிய குறைபாடுகள் என்று சொல்லி, ஒன்றிரண்டு சொல்லப்பட்டது. நல்ல முறையில் நடத்தப்படவில்லை, சில இடங்களில் ஊழல்கள் இருக்கின்றன, தவறுகள் இருக்கின்றன என்று சொல்லி, உடனே அதை சட்டத்தின் மீது உள்ள குற்றமாகக்கூட சிலர் சொன்னார்கள். அது ஒரு நியாயமற்ற குற்றச்சாட்டு. காரணம் என்னவென்று சொன்னால், ஆரம்பத்தில் நான் சொன்னது போல, ஏராளமாக பொதுமக்கள் சேர்ந்து நடத்துகிற இயக்கத்திலே ஏதாவது சில தவறுகள் சில இடங்களில் ஏற்படத்தான் செய்யும். இலாகா அதிகாரிகள் தவறு செய்யலாம் அல்லது பொதுமக்கள் தவறு செய்யலாம். 'பினல் கோடு' நாம் 150 வருஷத்திற்கு முன்னாலே செய்துவிட்டோம். அதனால் இன்றைக்கு நாட்டிலே எல்லாவித குற்றங்களும் அழிந்துவிட்டதா என்ன? அதுபோல சட்டம் இருப்பது எதற்காக என்று சொன்னால்,

தவறுகள் ஏற்பட்டால் அதைத் தடுப்பதற்கும், கண்டிப்பதற்கும்தான் சட்டம் செய்திருக்கிறோம். அந்த முறையில்தான் மக்கள் ஒன்று சேர்ந்து கூட்டுறவு இயக்கத்தை நடத்த முடியும். அப்படி நடக்கிறபொழுது சில தவறுகள் ஏற்பட்டால் அதைத் தடுப்பதற்கு, கண்டிப்பதற்கு விதிகள் செய்திருக்கிறோம். தண்டனை விதிக்கிறோம். சில குறுக்கீடுகள் செய்கிறோம். அந்த முறையில்தான் இந்தச் சட்டம் இயற்றப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டம் செய்த உடனேயே எந்த விதமான தவறும் ஏற்படாது என்று சொல்லுவதும் சரியல்ல. தவறுகள் ஏற்பட்டுக்கொண்டுதான் இருக்கும். இந்தச் சட்டம் செய்வதினால் என்ன பலன் என்று சொல்லுவதிலும் பிரயோசனம் இல்லை. தவறுகள் ஏற்பட்டால், அவைகளைத் திருத்துவதற்கும், கண்டிப்பதற்கும், அவைகள் ஏற்படாமல் தடுப்பதற்கும் தான் இந்த விதிகள். அந்த விதத்தில் சட்டங்கள், விதிகள் அமைக்கப் படுவதன் காரணமாக பல தவறுகள் நடக்காமல் இருப்பதற்கு உதவியாக இருக்கிறது.

ஏதோ பல சொஸைட்டிகளில் தப்பு நடந்துவிட்டது, பணத்தை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள் என்றெல்லாம் சொன்னார்கள். சொஸைட்டி களில் இருப்பவர்களும் நம்முடைய நாட்டு மக்கள்தான். நாட்டு மக்க ளிடையே திருட்டுக் குற்றம் குறைந்துவிட்டதா? மோசடி செய்யும் குற்றம் குறைந்துவிட்டதா? அந்த விதத்திலே குற்றம் எத்தனை சத விகிதம் நாட்டிலே இருக்கிறதோ, அந்த சதவிகிதத்தில்தான் குற்றங்கள் கூட்டுறவு சொஸைட்டிகளில் இருந்தாலும் இருக்கும், வேறு இலாகாக்களில் இருந் தாலும் இருக்கும், எந்த இடத்திலும் இருக்கும். இதை மாத்திரம் தனியாக எடுத்து அதிகமாக விவரித்துக் கூறுவதினால், ஏதோ அந்த இடத்தில் மாத்திரம் தவறு நடந்துவிட்டதாகத் தோன்றும். இங்கே ரூ. 30,000 போய்விட்டது, அங்கே ரூ. 10,000 போய்விட்டது என்றால், நாட்டில் இருக்கக்கூடிய மக்கள் அந்த விதத்தில் தவறுகளை வாழ்க் கையில் எல்லாத் துறைகளிலும் செய்கிறார்கள். அந்த அளவுக்குத்தான் இந்த இடத்திலும் இருக்கிறதே தவிர, அதைவிட அதிகமாக இல்லை என் பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அது மாத்திரம் அல்ல. நான் நேற்று கணக்குக் கொடுக்கும்போதுகூட 20,000 சொஸைட்டிகளுக்கு அதிகமாக இருந்தாலும், புகார் என்று வந்தது 150 சொஸைட்டிகளைப் பற்றித்தான் என்று சொன்னேன்.

**SRI A. GOVINDASAMI :** அப்படிப் பணத்தைக் கையாடுபவர்களை தண்டிக்கிற முறை இருக்கும்போது, கூட்டுறவு இயக்கத்தின் பணத்தை கையாடுதல் செய்தவர்கள் எந்த அளவுக்குத் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள், எந்த அளவுக்குத் திருத்தப்பட்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்பு கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** சட்டசபை அங்கத் தினர்களுக்குக் கேள்வி கேட்கும் உரிமை ஒரு பெரிய உரிமை. எப் பொழுது நம்முடைய கனம் அங்கத்தினர் கேள்வி கேட்டாலும் சரி, சென்ற வருஷத்தில் கூட்டுறவு இயக்கத்தில் எத்தனை பேர்கள் தண்டிக்கப்பட்டார் கள் என்று கேட்பதில்லை. ஏதோ அவருக்கு எந்த இடத்தைப் பற்றிக் கோபம் வருகிறதோ அந்த இடத்தைப் பற்றி மாத்திரம் கேள்வி கேட்பார். மொத்தமாக ஆண்டில் கூட்டுறவு இயக்கத்தில் எவ்வளவு தவறுகள் நடந்தன, எத்தனை பேர்கள் தண்டிக்கப்பட்டார்கள் என்று கேட்டால், இந்தப் புள்ளி விவரங்கள் எல்லாம் கிடைக்கும்.

இன்றைக்குக் குற்றச்சாட்டு பல விதமாக இருக்கிறது. சாதாரணமாகப் பொதுமக்கள் நடத்துகிற இடத்திலே சர்க்கார் எதற்கெடுத்தாலும் குறுக் கீடு செய்கிறார்கள் என்று குற்றம் சாட்டுவது சரியாகாது. ஏதோ தப்பு செய்தவர்களைத் தண்டிக்காமல் விட்டுவிடுவார்கள் என்று சொல்லுவதும் சரியாகாது. நான் இன்றைக்கு ஒத்துக்கொள்ளுகிறேன். குற்றம் நிரூபிக் கப்பட்டால்தான், குற்றம் நிரூபிக்கப்பபட்டதாக—அதற்காகச் சட்ட அதிகாரி கள் இருக்கிறார்கள் அவர்கள் சொன்னால்தான் நாங்கள் ப்ரொஸீடிங்ஸ்

30th March 1961] [Sri R. Venkataraman]

(**Proceedings**) நடவடிக்கை எடுக்க முடியும். புகார் வந்தவுடனேயே அவர்கள் மீது நடவடிக்கை எடுத்துவிட முடியாது. புகார் வந்துவிட்டது என்ற காரணத்திற்காக உடனே தண்டனை கொடுத்துவிடவும் முடியாது. மக்களிடமிருந்து பல புகார்கள் வருகின்றன. புகார்களைப் பார்த்து உடனே அவைகளைப் பரிசீலனை செய்வதற்கு டெப்யூடி ரிஜிஸ்ட்ராருக்கு அனுப்புகிறோம். அவருக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால், அங்கு இருக்கிற சட்ட இலாகா அதிகாரிகள், அதாவது, பப்ளிக் ப்ராஸிக்யூடர் (Public Prosecutor) அல்லது அடிஷனல் பப்ளிக் ப்ராஸிக்யூடர் அவர்களைக் கலந்து ஆலோசிக்கிறார்கள். அங்கு இருக்கிற சட்ட அதிகாரிகள் குற்றம் இல்லை என்று சொல்லிவிட்டால், அவர்கள் சொல்லுவதைத்தான் சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்குமேல் உட்கார்ந்து, 'இல்லை, இவர் குற்றம் செய்திருக்கிறார்' என்று சொல்ல முடியாது. அதே போல் சட்ட இலாகா அதிகாரிகள் ஒருவர் பேரில் குற்றம் இருக்கிறது என்று சொன்னால் 'போனால் போகிறது, அவரை விட்டுவிடுங்கள்' என்றும் நாங்கள் சொல்ல முடியாது. எல்லாவற்றையும் விசாரணை செய்து, 'பிரிலிமினரி ரிபோர்ட்' வரவழைத்து சந்தேகம் இருக்குமானால், சட்ட இலாகா அதிகாரிகளைக் கலந்து ஆலோசித்து அவர்கள் என்ன அபிப்பிராயம் கொடுக்கிறார்களோ அதன்படி நாங்கள் செய்கிறோம். ஆகையால் குற்றம் செய்தவர்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்று சொல்லுவது சரியாகாது. எப்பொழுதும் நடவடிக்கை எடுக்கத்தான்படுகிறது. ஆனால் சட்ட பூர்வமான நடவடிக்கைதான் எடுக்க முடியும். **Rule of Law** என்று சொல்லுகிற முறையில் நாம் ஆட்சி நடத்துவதால், சட்டத்தின் அடிப்படையில்தான் நாம் நடவடிக்கை எடுக்க முடியும்.

*SRI R. **KRISHNASAMI NAIDU** : அமைச்சர் அவர்கள் இந்தச் சட்டத்தைக் கொண்டுவரக்கூடிய சந்தர்ப்பத்திலே பொதுஜனங்களுக்கு பரவலாக பெருவாரியான நன்மைகளைச் செய்துகொண்டு முன்னேறி வரக் கூடிய ஒரு இயக்கத்தைப் பற்றி அல்லது நிர்வாகத்தைப் பற்றி, சர்க்கார் அதிகாரிகளைப் பற்றியும் கூட சர்க்காருக்கு அவதூறாக எழுதி, மனுக்கள் எழுதக் கூடிய வழக்கம் அதிகரித்துக்கொண்டு வருகிறது என்று சொன்னார்கள். அப்படிப்பட்ட புகார்கள் விசாரிக்கப்பட்டபொழுது, அவ்வாறு வந்த புகார்கள் சரியல்ல என்று தெரிந்துகொண்ட பிறகு, அந்த மாதிரி மனுக்கள் எழுதுபவர்கள் மீது, புகார் செய்தவர்கள் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் இருப்பதினால், அம்மாதிரி ஆதாரமற்ற புகார்கள் செய்வது மேலும் வளர்ந்துகொண்டு போகின்றன. சர்க்கார் அதிகாரிகள் பேரில் லஞ்சப் புகார்களையும், இன்னும் அதிகப்படியான குற்றங்களையும் செய்ததாகப் புகார்கள் எழுதப்படுகின்றன. அந்தப் புகார்களை நிரூபிப்பதற்காக சர்க்கார் அதிகாரி விசாரணை செய்யும்பொழுது, அம்மாதிரி புகார் கொடுத்தவர்கள் அவர்கள் கொடுத்த புகாரை நிரூபிப்பதற்குத் தயாராக இருப்பதில்லை. கூப்பிட்டால் கூட வருவதில்லை. அப்படிப் பல விவரங்களை நான் அறிவேன். இந்த இயக்கம் சரியாக வளர்வதற்கு, சர்க்கார் அதிகாரிகள் மீது அநியாயமாக புகார் கூறுபவர்கள் மீதாவது பின்னால் நடவடிக்கை எடுப்பதற்கு சட்டத்திலே ஏதாவது வழி முறைகள் வரையறுக்கப்படுமா என்பதை அமைச்சர் அவர்கள் தெளிவுபடுத்தும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. **VENKATARAMAN** : பொது வாழ்க்கையிலே சில நன்மைகள் உண்டு. சில கஷ்டங்களும் உண்டு. நன்மைகள் என்பது, பிறருக்கு நல்லது செய்யக் கூடிய ஒரு வாய்ப்பு இருப்பதுதான். அதிலே இருக்கிற கஷ்டம் என்பது, எல்லோராலும் குற்றம் சாட்டப்படுவது தான். அந்த விதத்தில் குற்றம் சாட்டுவதை நாம் எதிர்நோக்கித்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் பொது வாழ்க்கையிலே வரக்கூடாது. உத்தியோகத்தில் இருப்பவர்கள் 'நம் மீது குற்றம் குறைகளை எழுதிவிடுவார்களோ' என்று நினைத்தால், அவர்கள் உத்தியோகத்திற்கு வரக் கூடாது. மந்திரிகளும் 'நம் மீது குற்றம் குறைகள் எழுதி விடுவார்களோ' என்று எண்ணினால் அவர்கள் மந்திரியாக வரக் கூடாது. எந்தக் குற்றச்சாட்டு வந்தாலும், உடனே அவர் மீது நடவடிக்கை எடுத்து

[Sri R. Venkataraman] [30th March 1961

விடுவது என்று சொன்னால், அது முடியாத காரியம். குற்றச்சாட்டு பொய் என்றால், தூக்கியெறிந்துவிடுவார்கள். சரியென்றால், நடவடிக்கை எடுப்பார்கள். குற்றச்சாட்டு செய்கிறவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால், அது அவ்வளவு சரியில்லை ; அப்படியென்றால் ஜனநாயகத்தை நன்றாக நடத்த முடியாது. கஷ்டம் இருக்கிறது ; கஷ்டத்தை உணர்கிறோம். சாதாரணமாக மொட்டை பெடிஷன் போட்டால் கவனிப்பதில்லை. கையெழுத்துப் போட்டு, அட்ரஸ் கொடுத்து எழுதினால், சற்று சீராகப் பரிசீலனை செய்ய முடியும். அதற்கு முதலில் பிரிலிமினரி பரிசீலனை செய்து, அதற்குப் பிறகு, நடவடிக்கை எடுக்கப்படுகிறது. யார் எந்தப் பெடிஷனை எழுதினாலும் வசாரணை செய்கிறோமா என்ன ? ஆகவே, அவ்வாறு பிரிலிமினரி வசாரணை செய்த பிறகு அது தவறு என்றால், அதைப் போட்டுவிடுகிறோம். அதே மாதிரி மறுபடியும், மறுபடியும் பெடிஷன்கள் வந்தால், "ஆமாம், இந்த மாதிரித்தான் மூன்று மாதத்திற்கு முன்னால், ஒரு கம்ப்ளெயிண்ட் வந்தது ; அவருக்கு வேண்டாதவர்கள் இருக்கிறார்கள் போலிருக்கிறது" என்று விட்டுவிடுவோம். ஆகவே, அந்த மாதிரி பாதுகாப்பும் இருக்கிறது. ஆனாலும், குற்றச்சாட்டு எழுதியவர் மேல் நடவடிக்கை எடுப்பது என்பது இயலாத காரியம். நான் சொன்னதுபோல, பொதுப்பணியில் இருப்பவர்களுக்கு இம்மாதிரிச் சங்கடங்கள் இருக்கத்தான் செய்கின்றன. அதைப் பொறுத்துத்தான் ஆக வேண்டும்.

கனம் அங்கத்தினர் கரையாளர் சொன்னார்கள், ஜெனரல் பாடி சிறியதாக அமைப்பது நல்லதல்ல என்றும், அதனால் கஷ்டம் ஏற்படும் என்றும், அந்த செக்ஷனைப் பார்த்தால், என்ன போட்டிருக்கிறது என்றால் செக்ஷன் 'Section' 26 (1) (a)-ல் 'Subject to the provisions of this Act, the rules and the by-laws, the ultimate authority of a registered society shall vest in the general body of its members.' அதுதான் நியாயம். அதன் பிறகு, "Provided that, where the by-laws of a registered society provide for the constitution of a smaller body consisting of the representatives of its members elected in accordance with such by-laws, the smaller body shall exercise . . ." அதாவது பை-லாவில் சின்னக் கூட்டம் போட்டு, மகாசபைக் கூட்டத்தைவிட்டு, அதை ஒத்துக்கொள்ளும்படி போட்டிருக்கிறது. பை-லாவெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டுத்தான் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நாம் பெரிய ஸ்தாபனங்கள் 50,000, அல்லது ஒரு லட்சம் அங்கத்தினர்கள் கொண்ட சங்கங்கள் வளர வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். 50,000 பேர்களும் கூடி ஒரு ஜெனரல் பாடி நடத்த முடியாது. அதற்காக இதை ஒரு "**Permissive**" கிளாஸாக, அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அனுமதிக்கிற ஷரத்து, பெரிய சொஸைட்டிகளாக இருந்தால் இப்படி நடத்திக்கொள்ளலாம். எந்தெந்த சொஸைடிகள் அவ்வாறு அனுமதிப்பது என்று ரெஜிஸ்ட்ரார் முடிவு செய்து, "**Smaller bodies**" வேண்டுமா, அவசியமில்லையா என்று சொல்ல முடியும்.

நம்முடைய கூட்டுறவு விவசாயப் பண்ணைகளைப் பற்றி அபிப்பிராயம் சொல்லப்பட்டது ; ஒருவர் அங்கத்தினராக கட்டாயம் ஐந்து வருஷம் இருக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தம் இருக்கிறது என்று சொன்னார்கள். இன்றைக்கு விவசாயக் கூட்டுறவுப் பண்ணைகள் விஷயத்தில் யாரையும் நிர்ப்பந்தம் செய்யவில்லை. அவர்களாகவே ஒத்துக்கொண்டு, ஐந்து வருஷங்களுக்கு விலகவில்லை என்று கையெழுத்துப் போட்ட பிறகு, சட்டத்தை, விதியை அமுல் நடத்தக் கூடாது என்றால் அது சரியில்லை. கூட்டுறவுப் பண்ணைகளில் சேருகிறவர்கள், தாங்களாகவே செய்த காரியம் அது. யாரும் நிர்ப்பந்திக்கவில்லை. இன்றைக்கு அது தவறு என்றால், அதை அவர்கள் குறை கூறுகிறார்கள் என்றால், அது மற்றவர்கள் அவர்களை தடுக்கிறார்கள் என்றுதான் அர்த்தம். பண்ணையில் சேர விரும்புகிறவர்களைத் தவிர, இஷ்டம் இல்லாவிட்டால், யாரும் சேர வேண்டிய அவசியம் இல்லை. அந்தத் தவணையை ஒத்துக்கொண்டால்தான் பண்ணையில்

30th March 1961] [Sri R. Venkataraman]

சேரலாம். இதன் நோக்கமே, சிறு நிலம் வைத்திருப்பவர்கள், கூட்டுறவுப் பண்ணையில் சேர்ந்து செய்யும்போது, வருஷாவருஷம் ஒவ்வொருவராக நடுவில், நடுவில், " போகிறேன், போகிறேன் " என்றால், பண்ணையில் சேருவதால் ஏற்படும் நன்மையை யாரும் அடைய முடியாமல் போய்விடும். 5, 10 வருஷங்கள் சேர்ந்து இருந்தால்தான் எல்லோரும் சமமாகப் பலன்களை அடைய முடியும். ஆனால், இதில் கட்டாயமோ, நிர்ப்பந்தமோ இல்லை. அப்படி இருப்பதாகச் சொல்லுவது சரியில்லை. அப்படிப் பண்ணைகள் செயல்படவில்லை.

இதில் நடைமுறையைப் பற்றிப் பல அபிப்பிராயங்கள் கூறப்பட்டன. காரண்டி கொடுக்க வேண்டும், மூலதனம் கொடுக்க வேண்டும், டிவிடெண்ட் கொடுக்க எத்தனை ஒதுக்க வேண்டும் என்பதெல்லாம் பற்றிச் சொல்லப்பட்டது. இந்த மசோதாவில், 62–வது செக்ஷனில் இதைப் பற்றி சொல்லியிருக்கிறது. செலக்ட் கமிட்டியில் எல்லாவற்றையும் பரிசீலனை செய்து பார்க்க வேண்டிய விஷயம்; எவ்வளவு தூரம் வருமானம் சொஸைடிக்குக் கிடைக்கும், எவ்வளவு கொடுக்க முடியும், பொது நிதிக்கு பாக்கி எவ்வளவு இருக்கும், டிவிடெண்ட் கொடுக்க முடியுமா என்பதெல்லாம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். இறுதியாக இப்பொழுது ஒரு அபிப்பிராயம் சொல்லுவதற்கில்லை.

சொஸைடிகளுக்கு பல துறைகளில் உதவிகள் செய்ய வேண்டிய நிலை இருக்கிறது. உத்தியோகஸ்தர்கள் நியமிக்க வேண்டாமா, அப்படி நியமித்தால், அவர்கள் சம்பளத்திற்காக மூன்று வருஷத்திற்கு உதவி கொடுக்க வேண்டும் என்று இப்பொழுது ஏற்பாடுகள் செய்திருக்கிறோம்; முதல் வருஷத்தில் முழுச் சம்பளமும், இரண்டாம் வருஷத்தில் மூன்றில் இரண்டு பங்கும், மூன்றாம் வருஷத்தில் மூன்றில் ஒரு பங்குமாக, சர்க்கார் ஏற்றுக் கொள்ளுகிறது. அந்த மூன்று வருஷத்திற்குள்ளே அந்த சொஸைடியில் சரியான நிலை ஏற்பட்டால், அது தானாகவே இயங்க முடியும், அந்த நிலைக்கு அது வரும். ஆகவேதான் பொதுவாகச் சட்டத்திலே கொடுத்திருக்கிறோம் ஷரத்துக்களெல்லாம். இவை நம் சொஸைடிகள் நல்ல முறையிலே நடத்த பரவலாக எல்லோருக்கும் உதவி செய்ய ஏற்பட்ட ஷரத்துக்கள்.

கூட்டுறவு ஸ்தாபனத்தில் ஒருவர் எத்தனை சொஸைட்டிகளில் இருக்கலாம் என்பது சில அங்கத்தினர்களுக்கு சற்றுக் கோபம் உண்டாக்கி விட்டது என்று நினைக்கிறேன். நான் ஆரம்பத்திலே கூடச் சொன்னேன். இப்படித்தான் இருக்க வேண்டும் என்று இறுதியாகச் சொல்லவில்லை, எந்த அளவுக்கு பரவலாக மற்றவர்களும் கூட்டுறவு இயக்கத்தில் சேர்த்துக்கொள்ளக்கூடிய நல்ல சூழ்நிலையை உண்டாக்க வேண்டுமோ அப்படிச் செய்ய வேண்டும் என்று. திறமைசாலிகள், அவர்களே இருக்க வேண்டும், மற்றவர்கள் இருக்கக் கூடாது என்றிருந்தால், மாறுதல் அளிக்கும் அளவுக்கு பரவல் அடையாது என்ற பயம் சர்க்காருக்கு இருக்கிறது. ஆகவேதான் இப்படிச் செய்ய முற்பட்டோம். அதனால் யாரும், தங்களையோ, மற்றவர்களையோ விலக்கிவிட்டார்கள் என்று நினைக்கத் தேவையில்லை. எல்லோருடைய கருத்தும் எப்படி இருக்கிறதோ அப்படிச் செய்யலாம். (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி : Now you are yielding !) அதே பேச்சுத்தான் ஆரம்பத்திலும் சொன்னேன். 28–வது செக்ஷனைப் பற்றிச் சொல்லும்போது சொன்னேன் : இது சர்க்கார் இறுதி முடிவு என்று சொல்லவில்லை. எல்லோரோடும் கலந்தாலோசித்து, செய்ய வேண்டும் என்று. அடிப்படையாக ஒருவரோ, அல்லது ஒரு கூட்டமோ எப்பொழுதும் இயக்கத்தை தாங்களே தங்கள் கையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று இருப்பதை மாற்ற வேண்டும் என்பது சர்க்கார் கொள்கை என்றேன். இப்பவும் அதைத்தான் சொல்லுகிறேன்.

இந்த மசோதா கொண்டுவருவதில், முன்பாகவே கூட்டுறவு இயக்கத்தில் உள்ளவர்களைக் கலந்து செய்யவில்லை என்று நண்பர் சுப்பிரமணிய கௌண்டர் சொன்னார்கள். இந்தச் சட்டம் செய்ய வேண்டும் என்று

ஆரம்பித்து நாலு வருஷங்கள் ஆயிற்று; என்னமாக நாலு வருஷம் என்றால், முதலில் நாராயணசாமி பிள்ளை கமிட்டி பரிசீலனை செய்தது; அதற்குள்ளே மத்திய சர்க்கார், "நாங்கள் ஒரு சட்டம் கொண்டுவரப் போகிறோம்; நீங்கள் சற்றுப் பொறுத்து இருங்கள்; எங்கள் மாடல் சட்டத்தைப் பாருங்கள்" என்று சொன்னார்கள்; இதனால் தயக்கம் ஏற்பட்டது. இதற்குப் பிறகு இந்த பில் தயார்செய்யப்பட்டது. அது பிறகு லா டிபார்ட்மெனட் பார்த்து, இபபொழுது வந்திருக்கிறது. இதற்கு 4 வருஷம் ஆயிற்று. இன்னும் இதைப் பரிசீலனைப் பண்ணிக்கொணடிருந்தால் இந்த ஐந்து வருஷம் கூடப் போதாது. பரிசீலனைக்கு எல்லை கிடையாது. நாம் தான் ஏதோ ஒரு இடத்தில் பரிசீலனையை நிறுத்திக்கொண்டு காரியத்தில் இறங்க வேண்டும். நடைமுறையில் சிக்கல், கஷ்டம் ஏற்படும்போது, அதற்குத் தக்க திருத்தங்கள் செய்துகொள்ள முடியும். கூட்டுறவாளர்களை எலலாம் கலந்துகொண்டுதான் எதையும் செய்ய வேண்டும் என்றால், ஒன்றுமே செய்ய முடியாது. ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சொல்லிக்கொண்டுதான் இருப்பார்கள். மர்ச்சென்ட்ஸ்களைக் கலந்துகொண்டுதான் சேல்ஸ் டாக்ஸ் ஆக்ட் கொண்டுவர வேண்டும் என்றால் முடியுமா? அப்புறம் கைதிகளைக் கேட்டுக்கொண்டுதான் பீனல் கோடு கூடச் செய்ய வேண்டுமோ என்னமோ தெரியாது.

**SRI K. S. SUBRAMANIA GOUNDER :** கூட்டுறவு இயக்கம் என்பது கூட்டுறவாளர்களின் தன்னலமற்ற சேவையையே அடிப்படையாகக் கொண்டு வளர்வது. இத்துறையில் சட்டம் செய்யும்போது பெரும்பாலான கூட்டுறவாளர்களின் ஒத்துழைப்பையே நம்பியிருக்கிற இத்துறை நல்ல வளர்ச்சி அடைய வேண்டும் என்பதற்காக கூட்டுறவாளர்களையும் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று சொல்லுவதற்கும், அதே சமயத்தில் கைதிகளைக் கலந்துகொண்டா பீனல் கோடு செய்ய வேண்டும் என்பதற்கும் எந்த அளவு பொருந்தும் என்பதை அமைச்சர் அவர்கள் தன் நெஞ்சைத் தொட்டுப்பார்த்து பதில் சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** நான் சொன்னது தப்பு. அதை வித்ட்ரா (**withdraw**) பண்ணிக்கொள்ளுகிறேன். ஆர்க்குமென்டுக்காகச் சொன்னேன். சொல்லியிருக்கக் கூடாது. முதலாவதோடு நிறுத்திக்கொண்டிருக்க வேண்டும். இரண்டாவது சொல்லப்படாது. ஒன்று மாத்திரம் சொல்ல முடியும். இந்தச் சட்டம் வருவதற்கு முன்னால் எல்லாத் தரப்பாளர்களும் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படும். பொறுக்குக் கமிட்டியிலும் நல்ல முறையில் பரிசீலனை செய்யப்படும். மற்றவர்களும் தங்கள் அபிப்பிராயங்களை எழுதி அனுப்பலாம். பொது மக்களிடம் அபிப்பிராயம் கோருவது என்பது பொறுக்குக் கமிட்டிதான் செய்ய வேண்டும். அவசியம் ஏற்பட்டால் அதையும் அவர்கள் செய்வார்கள். ஆகவே எல்லோரும் இதை ஒரு முகமாக ஆதரிக்க வேண்டும் என்பது என் அவா. இதை இவ்வாண்டுக்குள்ளேயே நிறைவேற்றுவதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 22 of 1961) be circulated for eliciting public opinion."

The amendment was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

"That the number of Members be increased to 23 and the following Members of the Assembly be added as Members of the Committee :—

1. Sri B. Bhaktavatsalu Naidu.
2. Sri N. S. Ramalingam.
3. Sri T. S. Ramaswamy."

